ஓம்.
முருகன் துணை.

# விஷய அட்டவணை.

ஓம்.

குகமயம்.

# திருமுருகாற்றுப்படை துதி.

## (1) திருப்பரங்குன்றம்

"இருப்பரங் குறைத்திரு மெஃக வேலுடைப்
பொருப் பரங்குணர்வுறப் புதல்விதன்மிசை
விருப்பரங்கமரிசை விளங்கக் காட்டிய
திப்ருபரங் குன்றமர் சேயைப் போற்றுவாம்"

## (2) திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)

"சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடு மெஃக மெந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய் வருசேயைப் போற்றுவாம்"

## (3) திருவாவினன்குடி (பழனி)

"காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவரவிளியச்சூர் முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவருமமலற்போற்றுவாம்"

## (4) திருவேரகம் (சுவாமி மலை)

"நீரகத்தேதனை நினையுமன் பிேனோர்
பேரகத்தலமரும் பிறவி நீத்திடுந்
தாரகத் துருமாந்தலைமையெய்திய
வேரகத்தறு முகனடிகளேத்து வாம்"

## (5) குன்று தோருடல்

"ஒன்று தோருடலை யொருவியாவிமெய்
துன்று தோருடலைத் தொடங்கியைவகை
மன்று தோருடிய வள்ளல் காமுறக்
குன்றுதோருடிய குமரற்போற்றுவாம்"

## (6) பழமுதிர்ச் சோலை (கள்ளழகர் கோவில்)

"எழமுரைப் புனத்திறைவி முன்புகன்
கிழமுதிரை நலங் கிடைப்பமுன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர்சோலையம் பகவற் போற்றுவாம்"

கந்தபுராணம்.

பழைய பதிப்பைப்பற்றியும், இப்போது வெளியிடப்படும் புதிய பதிப்பைப்பற்றியும் சில விஷயங்கள் இங்கு கூறவேண்டியவனாக இருக்கின்றேன்.

பழைய பதிப்பில் ஒவ்வொரு படைவீட்டுத் துதியின் உரைப்பாகமானது பதவுரையாகவே அச்சிடப்பட்டிருப்பதோடு, ஷை பதவுரையின் இடையிடையே உரை விளக்கமும் வந்திருக்கின்றது. ஷை உரைப்பாகம் ஆரம்ப முதல் முடிவு வரையில், ஒரே தொடர் வாக்கியம்போல் பதிப்பிக்கப்பட்டிருப்பதால், இன்ன பதத்திற்கு இன்ன இடத்தில் பொருளிருக்கிறதென்பதும், இன்ன வாக்கியத்திற்கு இன்ன இடத்தில் பொருளிருக்கிறதென்பதும், எளிதிற்றெரிந்துகொள்ளுதற்கியலாத விதமாய் அமைந்திருக்கின்றன. இவ்வாறு பதிப்பிப்பதானது, விஷயங்களைத் தெரிந்துகொள்வோருக்கு,அளவு கடந்த சிரமத்திற்குஇடந்தருவதாயிருப்பதோடு, வெறுப்பையுந் தரக்கூடியதாயிருக்கின்றது. அதுபற்றி எனது ஆப்த நண்பரும், மஹான் சை. இரத்தின செட்டியாரவர்கள் பௌத்திரரும், இதன் பதிப்பாசிரியருமாகிய ஸ்ரீமான் சை. ந. பாலசுந்தரஞ் செட்டியாரவர்கள், இதனைத் தகுந்த முறையில் எழுதித் தரும்படி, என்னைக் கேட்டுக் கொண்டார்கள், எந்த விதமாகப் பதிப்பித்தால் இது எல்லோருக்கும் மிகு சுலபமாகப் பயன் தரக்கூடியதாக விருக்குமென்பதைப் பல முறை யாலோசித்து நோக்கி, மூன்று நான்கு விதங்களாக எழுதிப் பார்த்து, கடைசிமுடிவாக, இப்போது பதிப்பிலுள்ள மாதிரியாக எழுதி முடிப்பதென்று தீர்மானித்தேன்.

பழைய பதிப்பில் பல விடங்களில் வாசகக் குறிகள் சரியாக அமைக்காமையால், இது பதம் என்றும், இது பதப்

பொருளென்றும் தெரிந்துகொள்ளக்கூடாத நிலைமையில், நூல் அமைந்துள்ளது. மூல புஸ்தகத்தைக் கொண்டு அவற்றை யெல்லாம் ஒழுங்கு செய்திருக்கின்றேன்.

சிற்சில இடங்களில் உரை நேர் பதவுரையாக அமைந்திராமல், கருத்துரையாக அமைந்திருக்கின்றது.

இந்நூலில் பல விடங்களில் பதவுரையிலுள்ள விஷயங்களே அதன்கீழ் உரை விளக்கம்போல் காட்டப்பட்டிருக்கின்றன.

இப்போது பதிப்பித்துள்ள இந்நூல் பின் வருமாறு அமைக்கப்பட்டுள்ளது.

1. ஒவ்வொரு திருப்படைவீட்டுத் துதியின் மூலம், வரிக் கணக்கோடு போடப்பட்டிருக்கின்றது.

2. ஷை துதியைச் சிறுசிறு வாக்கியங்களாக எடுத்து, அந்வயப்படுத்திக் காட்டி, இதன் கீழ் ஷை வாக்கியம் இன்ன வரியைச் சார்ந்ததென்றும் காட்டப்பட்டிருக்கின்றது.

3. பிறகு, ஷை பதங்கள் ஒரே வரிசையாகவும், ஷை பதங்களின் பதப்பொருள், ஷை பதங்களுக்கு நேர் நேராகவும் போடப்பட்டிருக்கின்றன. ஷை பதவுரையையே பொழிப்புரையாகவும் படித்துக்கொள்ளுமாறு, இப்போது இந்நூல் அமைந்துள்ளது.

4. ஷை பதவுரையின்கீழ் உரைவிளக்கம் காட்டப்பட்டிருக்கின்றது; சிற்சில இடங்களில் உரைவிளக்க மில்லாமலுமிருக்கின்றது.

5. பாட பேதங்கள் அந்தந்த இடங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

மேற்காட்டியபடியே நூல் முழுவதையும், பழைய உரையையே பலரும் சிரமமின்றி வாசித்துக்கொள்ளுதற் பொருட்டுப்புதியமுறையில் அமைத்து எழுதியிருக்கின்றேன்.

திருமுருகாற்றுப்படை உரையை, இதுவரையில் இந்த விதமான அமைப்பில், எவரும் பதிப்பிக்கவில்லை. இந்த விதமான அமைப்பில், இந்நூல் வெளிவருவது இதுதான் முதன் முறையாகும்.

இந்நூலில் பழைய உரையையே புதிய மாதிரி அமைப்பில் எழுதியதைத் தவிர, வேறே ஒன்றும் செய்யவில்லை.

யானோ வித்வானல்லேன். என்னுடைய குழந்தைப் பருவமுதல் என் தாய்ப் பாஷையாகிய தமிழினிடத்தில் எனக்குள்ள பக்தியாலும், என்னுள் ஒவ்வோர் காலங்களில் ஓர் சக்தியிருந்து தூண்டிக்கொண்டிருக்கின்றமையாலும், பகவத் கிருபையாலும், இம்மாதிரி வேலையில், யான் பிரவேசிக்குமாறு, நேரிட்டது. உண்மையான கற்றறிந்த பெரியோர்கள் செய்தற்குரிய இப்படிப்பட்ட காரியத்தில் யான் பிரவேசித்தது என் சுய சக்தியினாலன்று. இதற்கு மேலே காரணம் காட்டப்பட்டிருக்கின்றது.

ஆகையால், இந் நூலின் அமைப்பிலாவது, அல்லது வேறு வகையிலாவது என்னுடைய அறியாமை காரணமாக, ஏதேனும் தவறு நேர்ந்திருந்தால், அதுபற்றி அடியேன் மீது கோபித்துக்கொள்ளாமல், அடியேனை மன்னித்தருளுமாறு, கற்றறிந்த பெரியோர்களை வணக்கத்துடன் பிரார்த்திக்கின்றேன்.

இம்மாதிரிக் காரியங்களில் பிரவேசிக்கும்படி எனக்கு ஊக்கமளித்த எல்லாம் வல்ல பரம்பொருளையும், என து சற்குரு மூர்த்தியையும் தியானித்து, இதனை முடிக்கின்றேன்.

சுபம்! சுபம்!!

திருவொற்றியூர்,
சென்னை.
7—4—1924.

இங்ஙனம்,
அ. மஹாதேவ செட்டியார்.

# நூன் முகம்

(இரண்டாம் பதிப்பு)

நக்கீரர் திருவாய் மலர்ந்தருளிய திருமுருகாற்றுப்படைக்கு, பரிமேலழகர் முதலிய பெரியார்கள் உரை எழுதியிருந்தும், அவ்வுரை என்போன்ற கல்வித் தேர்ச்சியில்லாதான் ஒருவனுக்குப் பொருள் விளக்கம் எளிதில் அறியக் கூடாமையை உத்தேசித்து, சென்னைமா நகரில் வேதாந்த தருக்க வித்வ சிரோன்மணியாயும், இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் போதகாசிரியராயும்விளங்கிய திருவாளர் - சாது கோ. வடிவேல் செட்டியார் அவர்கள், தம்மிடமிருந்த பரிமேலழகர் உரையைத் தெளிவுபடுத்தி அச்சிட உபகரித்ததோடு, அதனைப்பார்வையுமிட்டுத்தந்தார். அதனை ஸ்ரீமான் அ. மஹாதேவ செட்டியார் சில அரிய பெரியவிஷயங்களை சேர்த்தார். அப்புத்தகமேமுதற்பதிப்பாகும். அப் பதிப்புக்கள் பல, அறிவாளர்களது முயற்சியின் பயனாகச் செலவழிந்துவிட்டன. அதனால், இவ்விரண்டாம் பதிப்பு அச்சிட நேர்ந்தது.

இந்நூலின் முதற் பதிப்பில் ஆறாவது பழமுதிர் சோலை "விளிவு இன்று" இதிலிருந்து பரிமேலழகர் உரை பிரதி கிடைக்காமையால், நச்சினார்க்கினியர் உரையைப்பதிப்பிக்கப்பட்டது. இவ்விரண்டாம் பதிப்பில், சென்னை நகர சபையின் ஆல்டர்மனும், வழக்கறிஞரும் தமிழ் வித்வானுமான திருவாளர். T. P. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை M.A B.L., அட்வகேட் Dip. Ec, M.R.A.S. அவர்கள் நன்முயற்சியால்

---

# அநுபந்தம் 3

---

## திருவகுப்பு



---

Printed at the Grisaille Press, Mount Road, Madras. (287132.)

# ஷண்முக விஜயப்

(கந்தபுராணச் சுருக்கம்.)

(புதிய பதிப்பு : : 19- படங்களுடன்)

கலியுக வரதராய் அன்பர்கள் கலிகளைத் தீர்ப்பவர் ய
நிர்க்கதியாய்த் தம்மைச் சரண்புகுவோரைக் காப்பவர் ய
சூரபதுமனைச் சங்கரித்துத் தேவர்களைக் காத்தவர் ய
வேடர் மகளாகிய வள்ளி நாயகியைத் தடுத்தாட்கொண்
யார்? தம்மை வணங்குபவர்கள் வேண்டியவைகளை வே
டியவாங்கு அளிப்பவர் யார்?

முருகன்! குமரன்!! ஷண்முகன்
என்பதற்கு ஐயமுண்டோ?

உலகத்திலுள்ள அஞ்ஞானத்தையும் துக்கத்தை
அகற்றி, உலகத்தோரைச் சுகத்தில் வைப்பதற்காகச்
பெருமான் தமது நெற்றிக் கண்களினின்றும் தமது ப
உருவத்துடன் அவதரிக்கச் செய்த ஷண்முகக் கடவு
திவ்விய சரித்திரமாகிய விரிந்த கந்தபுராணத்தை அப்
மானது அடியார்களனைவரும் எளிதில் படித்துத் தெ
கொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடனும் கிருத்தி
சஷ்டி, விசாகம் முதலிய விசேஷ தினங்களிலும் பிரதி
மும் அத்திவ்விய சரித்திரத்தை யாவரும் பாராய
செய்து உய்யு நெறியைச் சேரவேண்டுமென்ற நோக்கத்
னும் விஷயங்களில் ஒன்றையும் விடாமல் சுருக்கமாக
சிறுவர் சிறுமிகளும் படித்தறிந்து கொள்ளத்தக்க எ
நடையிலும் இந்நூலில் எடுத்துக் கூறப்பட்டிருக்கி
யாவரும் இப் புத்தகத்தை வாங்கிப் படித்து அப்
மானது அருளைப்பெற்று உய்வாராக!!! கண்கவரும்
கிய படங்களும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அழ
பயிண்ட் செய்யப்பெற்றது. சீர்திருத்திய இரண்
பதிப்பு. 3-கலரில் அச்சிட்ட முகப்புப் படமும், அ
19-ஆப்டோன் படங்களும் கொண்டது : : அணா

---

# பாண்டவ சரித்திரம்

அல்லது

# தருமமே ஜயம்

(திரு. எ. வரதாசாரியார் பி.ஏ., எல்.டி., எழுதியது.)

இதுவரையில் இம்மாதிரியான புத்தகம் எவ்ராலும் பிர சுரிக்கப் படவில்லை. மூதநூலின் சௌரவத்துக் கேற்றபடி மிக்க அழகாய் அச்சிட்டு, அழகிய கலிகோ பைண்ட் செய்யப்பெற்றது. உயர்ந்த கிளேஸ் காகிதம். ஆப்டோன் படங்களுடன் கூடியது.

400 பக்கங்கள் கொண்டது : : விலை ரூ. **2—4—0**

ஐந்தாவது வேதமெனக் கொண்டாடப்பட்டு வரும் ஸ்ரீமத் மஹாபாரதம் மிகப் புண்ணியக் கிரந்தமும் நீதிக் களஞ்சியமு மாகும். இதைக் கேட்டாலும், பிறர்க்கு எடுத் துச் சொன்னாலும், இம்மையிலும் மறுமையிலும் க்ஷேம முண்டாகு மென்றபதற்கு ஐயமில்லை.

இது அரும்பொரு ளடங்கிய புண்ணிய கதைகளும், உத்தம புருஷர்களின் சரித்திரங்களும் நிரம்பப் பெற்றது. இதிலுள்ள விஷயங்களை யாவரும் தெரிந்துகொள்ளல் மிக்க அவசியம். இந்நூலில், பாண்டவர்களின் பிறப்பு வளர்ப்பு: அவர்கள் முதலில் அடைந்த பலவித கஷ்டங்கள்; பாஞ்சால ராஜனுகிய விராடனுடைய சம்பந்தம் பெற்றது, யாதவ சிரேஷ்டரான ஸ்ரீகிருஷ்ண பகவானது சகாயத்தால் பாண் டவர் எல்லா ஆபத்துக்களையும் தாண்டி ஜயம் பெற்றது; அவர்கள் தர்மம், தயை, சத்தியம், துஷ்டநிக்கிரகம் சிஷ்ட-பரிபாலனம முதலிய நற் குணங்களோடு கூடினவர்களாய் மன்னுயிரைத் தன்னுயிர் போலப் பாவித்துப் பிரஜை களிடம் அன்புபாராட்டி, நியாயமாய்ச் செங்கோல்செலுத்தி இம்மையில் பெரும் புகழும், மறுமையில் பேரானந்தமும் அடைந்தது முதலான அருமையான விஷயங்கள் அழகாய் விவரிக்கப்பட்டுள்ளன.

---

# ஸ்ரீமத் ராமாயண ஸாரம்

(வி. சேஷகிரி சாஸ்திரி, பி.ஏ., அவர்கள் எழுதியது.)

விலை — (முதல் பாகம்)—ரூ. ஒன்று.

விலை — (இரண்டாம் பாகம்)—ரூ. ஒன்று.

(அநேக அழகிய ஆப்டோன் படங்களுடன்)

*பாலர், பெரியோர் இருவருக்கும் உபயோகமாகும்படி எளிய நடையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.*

## சில முக்கிய அபிப்பிராயங்கள்

**சுதேச மித்திரன்.**— * **எளிய நடையில் இரு பாலார்க்கும் உபயோகமாகும்படி இனிய நடையில் இடைஇடையே கற்பனை போதித்து விளங்கும்படி எழுதப்பெற்றது: பள்ளிக்கூடங்களில் பலவிதமாயும் உபயோகப் படுத்தலாமென்பது எமது திடமான நம்பிக்கை.*

---

**தேசபக்தன்**—*இது மிகச் சிறந்த நூலாகக் காணப்படுகின்றது.* *எளிய நடையில் மிக இனிமையாக எழுதப்பட்டுள்ளது. கல்லூரி மாணாக்கர்களுக்கும் பிறர்க்கும் இது பெரிதும் பயன்படுமென்பது எமது உறுதியாதலின் இதனை அவர்களெல்லோரும் வாங்கி வாசித்தற்குரியவர்.*

---

**New India**-The Book *is written in elegant Tamil.* Apart from its value as an epitome of the story, it will be also useful **as a religious Text-Book in our Sccondary Schools.**

---

அல்லயன்ஸ் கம்பெனி, ஷண்முக விலாசம், மயிலாப்பூர், சென்னை.

விட்டுபோன பரிமேலழகர் உரை பிரதி கிடைத்தது. அதனை ஷை பிள்ளையவர்களே நூதன முறையில் எழுதித் தந்தனர். இதனை 120-ம் பக்கம் 15-ம் வரியிலிருந்து சேர்க்கப்பட்டிருக்கிறது.

இப் பதிப்பில் அடியேன் செய்யவேண்டுவதொன்றில்லையாயினும், பல அறிஞர்கள் இந்நூலை ஆராய்ச்சி செய்து, பல அரிய விஷயங்களைக்கண்டு வெளியிட்டார்கள். அதனை ஆதாரவாக் கொண்டு, இந்தப் பதிப்பில் சிறு ஆராய்ச்சியுடன், ஆறு படைவீட்டுத் துதிகளின் விளக்கமும், ஒருவாறு சுருக்கி எழுதி வெளியிடும்படி நேர்ந்தது. கந்தப் பெருமானிடத்து கரையிலா அன்பு கொண்ட நேயர்கள், கல்வித் தேர்ச்சியில்லா அடியேனது சிறு வேலையை ஆதரித்துக் குற்றம் நீங்கிக் குணம் கொள்வார்களென்று பிரார்த்திக்கின்றேன்.

"குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்" — குறள்.

[signature]

# நக்கீரர் வரலாறு.



1. இவர் மதுரைக் கணக்காயனார் மகனாராவர்.

2. கடைச் சங்கத்துத் தலைமைப் புலவர்.

3. முடத்திருமாறன் கடைச்சங்கம் கண்ட காலத்தில் புலவர் திலகரா யிருந்து, இறையனார் திருவாய் மலர்ந் தருளிய அகப்பொருளுக்கு உரை கண்டவர்.

4. இவர் வங்கிய சூடாமணி பாண்டியன் கட்டிய பொற்கிழி பெறத் திருமுகப் பாசுரம், ஆலவாயாரிடம் பெற்றுத்தந்த தருமிக்கு அப் பாசுரத்தில் குற்றங்கூறி மறுத்து, சிவபெருமா னெதிரில்வந்து கேட்கவும் அஞ்சாது, குற்றங் கூறி மறுத்து, பின் அக் குற்றத்தால் பொற்றாமரை யில் வீழ்ந்து கரையேறி, அகத்திய முனிவரிடம் இலக்கண முணர்ந்தவர்.

5. பார்வதி பிராட்டியார் கூந்தலுக்கும் செயற்கை மணம என்ற பழிப்பால் குட்டநோய் அடைந்து, அது தீரும்படி;

"ஆலவாயி லமர்ந்தாய்—தணிந்தென்மேல் மெய்யெரிவு
தீர்த்தருளு வேதியனே" என்றும்,

"என்மேற்
சிற்றத்தைத் தீர்த்தருளுந் தேவாதி தேவ
யாற்றவு நீ செய்யு மருள்."

என்றும் வேண்டி, வெப்புத் தணியத் திருக்கைலையடை யச் செல்லும்போது,

6. வழியிலிருந்த ஒரு தீர்த்தத்தையும் ஆலமரத்தை யுங் கண்டு, சிவபூசை செய்ய உட்கார்ந்து, சிவபூசை செய்த னர். செய்யும்போது,

7. அவ்வாலமரத்திலிருந்து ஒரிலை நிலத்திலும் நீரிலு மாக விழுந்தது; அதில் நிலத்தில்வீழ்ந்த, பாகம் பறவையாக வும், நீரில் வீழ்ந்த பாகம் மீனாகவும் மாறி, ஒன்றையொன் றிழுக்கத் தொடங்கின; அவ் விநோதத்தைச் சிவபூஜைசெய் வதைவிட்டுப் பார்த்திருந்தனர்; அப்போது,

8. அயக்கிரீவன் என்னும் பிரமராக்ஷஸ ஒன்று, இரு பட்டுப் பூசை யியற்றும் வித்துவான்கள் ஆயிரவரை

மிக்க உண்ண எண்ணங் கொண்டு, தொள்ளாயிரத்துத்
ாண்ணூற் றொன்பதின்மரை ஒரு குகையில் அடைத்து
த்து, ஒருவருக்காகத் தேடிக்கொண்டுவந்து, சிவபூஜையி
ந்த நக்கீரர் அகப்பட, அவரை அவரோடு ஆயிரவராக்கி
ு நற்காலம்' என்று எண்ணி, அவரைத் தூக்கிச்சென்று,
கயி லடைத்து, ஸ்நானஞ் செய்துவரச் சென்றது.

9. இவரைக் கண்ட குகையிலிருந்த புலவர்கள், இவ
க் கண்டு, "ஓகோ! நீ எங்களுக்கு இன்றைக்கு முடிவு
ம் வைத்தனையே" என்று பூதத்தின் செய்தியினையும்,
கள் செய்தியினையும கூறி முறையிட்டனர்.

10. இவற்றைக் கேட்ட நக்கீரர், திருமுருகாற்றுப்
ட யோதி,

"குன்ற மெறிந்தாய்" என்றும்,
"குன்ற மெறிந்ததுவும்" என்றும்

திக்க, அப்பூதத்தினைக் குமாரக்கடவுள் வேற்படையாற்
ால்வித்துச் சிறையிலிருந்த புலவர்களைத் தங்களிடம்
ாக விடுத்து.

11. தாம் முருகக்கடவுள் கட்டளைப்படி, ஒரு தீர்த்தத்
் மூழ்கித் தக்ஷிண கைலையாகிய திருக்காளத்தியில்
ந்து, குட்டநோய் நீங்கிப்பிராட்டியையும்சிவபெருமானை
் தரிசித்து, கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி பாடித்
தித்து முத்தி பெற்றனர்.

12. இவர் தமிழறியும் பெருமானை வாதில் வென்றனர்
ன்பர்.

13. இவர் செய்த நூல்களாவன: —

1. திருமுருகாற்றுப்படை,

# நக்கீரர் வரலாறு.



1. இவர் மதுரைக் கணக்காயனூர் மகனூராவர்.

2. கடைச் சங்கத்துத் தலைமைப் புலவர்.

3. முடத்திருமாறன் கடைச்சங்கம் கண்ட காலத்தில் புலவர் திலகரா யிருந்து, இறையனூர் திருவாய் மலர்ந் தருளிய அகப்பொருளுக்கு உரை கண்டவர்.

4. இவர் வங்கிய சூடாமணி பாண்டியன் கட்டிய பொற்கிழி பெறத் திருமுகப் பாசுரம், ஆலவாயாரிடம் பெற்றுத்தந்த தருமிக்கு அப் பாசுரத்தில் குற்றங்கூறி மறுத்து, சிவபெருமா னெதிரில்வந்து கேட்கவும் அஞ்சாது, குற்றங் கூறி மறுத்து, பின் அக் குற்றத்தால் பொற்றாமரை யில் வீழ்ந்து கரையேறி, அகத்திய முனிவரிடம் இலக்கண முணர்ந்தவர்.

5. பார்வதி பிராட்டியார் கூந்தலுக்கும் செயற்கை மணம என்ற பழிப்பால் குட்டநோய் அடைந்து, அது தீரும்படி;

"ஆலவாயி லமர்ந்தாய்— தணிந்தென்மேல் மெய்யெரிவு
தீர்த்தருளு வேதியனே" என்றும்,
"என்மேற்
சிற்றத்தைத் தீர்த்தருளுந் தேவாதி தேவனே
யாற்றவு நீ செய்யு மருள்."

என்றும் வேண்டி, வெப்புத் தணியத் திருக்கைலையடை யச் செல்லும்போது,

6. வழியிலிருந்த ஒரு தீர்த்தத்தையும் ஆலமரத்தை யுங் கண்டு, சிவபூசை செய்ய உட்கார்ந்து, சிவபூசை செய்த னர். செய்யும்போது.

7. அவ்வாலமரத்திலிருந்து ஓரிலை நிலத்திலும் நீரிலு மாக விழுந்தது; அதில் நிலத்தில்வீழ்ந்த பாகம் பறவையாக வும், நீரில் வீழ்ந்த பாகம் மீனாகவும் மாறி, ஒன்றையொன் றிழுக்கத் தொடங்கின; அவ் விநோதத்தைச் சிவபூஜைசெய் வதைவிட்டுப் பார்த்திருந்தனர்; அப்போது,

8. அயக்கிரீவன் என்னும் பிரமராக்ஷஸ் ஒன்று, இரு மனப்பட்டுப் பூசை யியற்றும் வித்துவான்கள் ஆயிரவரை

ஒருமிக்க உண்ண எண்ணங் கொண்டு, தொள்ளாயிரத்துத் தொண்ணூற் றொன்பதின்மரை ஒரு குகையில் அடைத்து வைத்து, ஒருவருக்காகத் தேடிக்கொண்டுவந்து, சிவபூஜையிலிருந்த நக்கீரர் அகப்பட, அவரை அவரோடு ஆயிரவராக்கி 'இது நற்காலம்' என்று எண்ணி, அவரைத் தூக்கிச்சென்று, குகையி லடைத்து, ஸ்நானஞ் செய்துவரச் சென்றது.

9. இவரைக் கண்ட குகையிலிருந்த புலவர்கள், இவரைக் கண்டு, "ஓகோ! நீ எங்களுக்கு இன்றைக்கு முடிவுகாலம் வைத்தனையே" என்று பூதத்தின் செய்தியினையும், தங்கள் செய்தியினையும கூறி முறையிட்டனர்.

10. இவற்றைக் கேட்ட நக்கீரர், திருமுருகாற்றுப் படை யோதி,

"குன்ற மெறிந்தாய்" என்றும்,
"குன்ற மெறிந்ததுவும்" என்றும்

துதிக்க, அப்பூதத்தினைக் குமாரக்கடவுள் வேற்படையாற் கொல்வித்துச் சிறையிலிருந்த புலவர்களைத் தங்களிடம் போக விடுத்து.

11. தாம் முருகக்கடவுள் கட்டளைப்படி, ஒரு தீர்த்தத்தில் மூழ்கித் தக்ஷிண கைலையாகிய திருக்காளத்தியில் எழுந்து, குட்டநோய் நீங்கிப் பிராட்டியையும்சிவபெருமானையும் தரிசித்து, கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி பாடித் துதித்து முத்தி பெற்றனர்.

12. இவர் தமிழறியும் பெருமாளை வாதில் வென்றனர் என்பர்.

13. இவர் செய்த நூல்களாவன: —

1. திருமுருகாற்றுப்படை,

2. கைலைபாதி காளத்திபாதி யந்தாதி,
3. இறையனாரகப்பொருளுரை,
4. திருவீங்கோய்மலை எழுபது,
5. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை,
6. திருவெழுகூற்றிருக்கை,
7. பெருந்தேவபாணி,
8. கோபப்பிரசாதம்,
9. காரெட்டு,
10. போற்றிக் கலிவெண்பா,
11. திருக்கண்ணப்ப தேவர் திருமறம்,
12. நாலடி நாற்பது
13. களவியலுரை என்பனவாம்.

இவையன்றி நற்றிணை, குறுந்தொகை, அக நானூறு, புற நானூறு என்பவற்றிற் சிற்சில செய்யுள்களும், திருவள்ளுவ மாலையிலுள்ள "தானே முழுதுணர்ந்து" என்னும் வெண்பாவும் இவரால் செய்த நூல்களாகும்.

14. இவர் குமாரர் கீரவி கோற்றனார்; நெநேல்வாடை இயற்றியவர்.

---

# பரிமேலழகர் வரலாறு

1. இவர் தொண்டை நாட்டில் திருக் காஞ்சிபுரத்தி லிருந்த வேதியர்.

2. இவர், இளமையில் அழகர் எனப் பெயர் பெற்று, தமிழ்நூற் புலமையும் வடநூற் புலமையும் நிரம்பப் பெற்றுப் புலவர் திலகராய்ப் புகழ் பெற்றிருந்தனர்.

3. இங்ஙன மிருப்பவர், தமது புலமை வெளிப்படு மாறு, பெரியதோருரை யியற்றக் கருதி, அதற்குத் திருவள்ளுவர் திருவாய் மலர்ந்தருளிய திருக்குறளே ஏற்றது என நன்கு அறிந்து, முன்னரே அந் நூலுக்குத் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, திருமலையர், மல்லர், கவிப் பெருமாள், காளிங்கர் என்பவர்கள் இயற்றிய உரையே யன்றித் தாமும் ஓர் உரை இயற்றினர்.

4. இவர் இவ்வுரையைப் பாண்டியன் அவைக்களத்தில் பிரசங்கிக்க, அரசன் "இதனை அவ்விட மிருக்கும் உருக்குப் பரிமேலிருந்து கூறுவீராயின் ஒப்புவோம்" என, அவ் வகையே பழுக்கக் காய்ச்சிய பரிமேலிருந்து, தம் உரை சிறந்ததெனக் கூறிப் பழுதில்லாமல் வந்தமையால், பரிமேலழகர் எனப்பட்டனர்.

5. இதனை,

" திருத்தகுசீர்த் தெய்வத் திருவள் ளுவர்தங்
கருத்தமைதி தானே கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமே லழகனென்னும்
மன்னு முயர்நாமன் வந்து."

" பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன்
தெரித்தவுரை யாமோ தெளி."

எனக் கூறியிருத்தலின், "இவரே உரையாளர்" எனப் பெயரடைந்தனர்.

6. இவர் காலத்திருந்த நச்சினார்க்கினியர் விருத்தராதலின், அவர்க்குத் தாம் இயற்றிய உரையைக் காட்ட, ஆசிரியர் சென்றிருக்கையில், நச்சினார்க்கினியர்.

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே" என்னும் திருக்குறட் செய்யுட்கு உரை கேட்க, ஆசிரியர், "முன் தனியாத முட்டை தனித்துக்கிடப்ப, அதனுட் கிடந்த புள் பருவம் வந்த காலத்துப் பறந்து போன தன்மைத்து" எனக் கேட்டுத் தாம் கூடு என உரை கூறியதைத் தெரிவித்து, ஆசிரியர் பரிமேலழகர் உரையைப் புகழ்ந்தனர் என்பர்.

7. இவர் தம் உரையில் ஆங்காங்குத் திருக்கோவையார், நாலடியார், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களினின்று மேற்கோள்கள் எடுத்து உதகரித்திருப்பதனாலும், கம்பராமாயணம் முதலியவற்றிலிருந்து, மேற்கோள்கள் எடுத்து உதகரித்தில்லாமையாலும், இவர் காலம் கம்பர் காலத்திற்கு முந்தி யிருக்கலாம்.

8. இவர் நக்கீரர் அருளிச் செய்த திருமுருகாற்றுப்படை என்னும் இந்நூலுக்குச் சுருங்கியதோர் உரை இயற்றினர். அதனை,

> "அரிமே லழகுறூஉ மன்பமை நெஞ்சப்
> பரிமே லழகன் பகர்ந்தான்—விரிவுரைமூ
> தக்கீரின் ஞான்று தனிமுருகாற் றுப்படையாம்
> நக்கீர நல்ல கவிக்கு."

என்பதனா லறிக.

9. இவர் சைவநூலுக்கு உரை யியற்றியிருத்தலானும், திருக்குறளில் இறைவனது எட்டுக்குணங்களைத் தமது கொள்கையாகக் குறித்து, மற்றவற்றைப் பிறன் கோளாகக் கூறுதலானும், ஸ்மார்த்தர் என்பர் சிலர். "அரிமே லன்புறூஉம் அன்பமை யந்தணன்" என்பதால், வைணவர் என்பர் சிலர்.

10. எட்டுத்தொகையுள் ஒன்றான பரிபாடலுக்கும் இவர் உரை எழுதினாரென்று சொல்லப்படுகின்றது. இதனை,

"கண்ணுதற் கடவு ளண்ணலங் குறுமுனி
..........................................
தரைமே லுதித்த தலைமை யோனே"

என்னும் பழைய உரைப் பாயிரத்தா லறியலாம்.

விரிவஞ்சிப் பரிமேலழகர் வரலாறு இங்குச் சுருக்கமாகக் காட்டப்பட்டது. மற்றும் இச் சரித்திர விரிவைப் பெருநூற்களில் கண்டு கொள்க.

---

உ

கணபதி துணை.

# திருமுருகாற்றுப்படை

## மூலமும்-உரையும்.

திருமுருகாற்றுப்படை யென்பது திருமுருகனிடத்தே ஆற்றுப்படுத்தலை உடையதென ஏழாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய், இப் பிரபந்தத்திற்குக் காரணக்குறியாயிற்று. திருவென்னும் பல பொருளொருசொல் வடமொழியிலே ஸ்ரீ என்பது போலத் தமிழிலே தேவர்கள்-அடியார்கள்-ஞானநூல்கள்-புண்ணிய ஸ்தலங்கள் முதலிய மேன்மையை யுடைய எப்பொருள் கட்கும் விசேடண மொழியாகி, அவற்றிற்கு முன்னர் மகிமைப்பொருளை உணர்த்திவரும்; இம்முறையை ஸ்ரீ அனந்தேசுரர் ஸ்ரீ மாணிக்கவாசகர்—ஸ்ரீ வாதுளாகமம்—ஸ்ரீ சாலிவாடிபுரம்—ஸ்ரீ பாதம் எனவும், திருமுருகர்—திருநாளைப் போவார்—திருக்கோவை—திருநெல்வேலி—திருவடி எனவும் வழங்குமாற்றால் அறிக. முருகென்றது சுப்பிரமணிய சுவாமியை. எக்காலத்தும் இளமையை உடையோராதலால், அவருக்கு முருகன் எனப்போந்த பண்புப்பெயர்.அன் விகுதி குன்றி முருகு எனப் பண்புபெயராய் நின்றும், அப் பண்பிப் பொருளையே தந்து நின்றது; அரசன்-அமைச்சன் என்பன அரசு அமைச்சு என நின்றாற்போல.

ஆற்றுப்படை யென்றது வழிப்படுத்தல், ஆறு - படு என்னும் இரண்டு சொற்கள் ஒருங்கு கூடி, ஆற்றுப்படு என ஒரு சொன்னீர்மைப்பட்டுப் பகுதியால் நின்று, தொழிற் பெயர்ப்பொருளுணர்த்தும். ஐ விகுதி புணர்ந்து ஆற்றுப்

படை என முடிந்தது. ஐ விகுதி தொழிற்பெயர்ப் பொரு ளுணர்த்தல், கொடை அளபெடை கண்படை என்பவைற் றாற் காண்க. வழிப்படுத்தியது எதன் பொருட்டெனின் ? முத்தி பெறுதற் பொருட்டென்க. அது பின்னர் இப்பிர பந்தத்தில்,

"சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்செலவு"

என்பதனால் அறியப்படும். யாரையெனின், அம்முத்தியைப் பெறாதானாகியும் அதனைப் பெறுதற்கு அபேக்ஷையுடை யானாகியும் உள்ளாளொருவனை. என்னை ? ஒரு பொருளைப் பெற்றவனைப் பெறுதியென வழிப்படுத்தல் வேண்டாமை யானும், அதனைப் பெறுதற்கு அபேக்ஷயில்லாதவனை வழிப்படுத்தல் கூடாமையானும் என்க. யாரெனின், அம் முத்தியைப் பெற்றானொருவன். என்னை! ஒரு பொருளைப் பெறாதான் அப்பொருள் இத்தன்மைத்தென்பதும், அதனைத் தனக்கு ஈய வல்லார் இவ ரென்பதும், அவ ரிடத்து அதனைப் பெறும் நெறியும், அதனால்,தான் எய்தும் இன்பமும் உள்ளபடி அறிதலும், பிறர்க்கு அறிவித்தலும் இயலாமையா னென்க.

இப்படிப் பிரபந்தஞ் செய்தற்கு விதி யாதெனின்,

தொல்காப்பியத்துப் புறத்திணையியலில்

"தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூத ரேத்திய துயிலெடை நிலையுங்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு
மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்

பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமுஞ்
சிறந்த நாளணி செற்ற நீக்கிப்
பிறந்த நாள்வயிற் பெருமங் கலமுஞ்
சிறந்த சீர்த்தி மண்ணு மங் கலமும்
நடைமிகுத் தேத்திய குடைநிழன் மரபு
மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமு
மன்னெயி லழித்த மண்ணு மங் கலமும்
பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்
பெற்ற பின்னரும் பெருவள னேத்தி
நடைவயிற் றோன்று மிருவகை விடையு
மச்சமு முவகையு மெச்ச மின்றி
நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமுங்
காலங் கண்ணிய வோம்படை யுளப்பட
ஞாலத்து வரூஉ நடக்கையது குறிப்பிற்
கால மூன்றொடு கண்ணிய வருமே."

என்னும் 36-ம் சூத்திரத்தில்

"ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்"

என்பதேயாம். இங்கே பெருவளமென்றது அஃதியலில்

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே,"

என்னும் 33-ம் சூத்திரத்திற் கூறப்பட்ட கொடியநிலை முதலிய மூன்றனுள் ஒன்றாகிய கந்தழியையாம். கந்தழி

யாவது ஒரு பற்று மற்று, அருவாய்த் தானே நிற்குந் தத்துவங்கடந்த பொருள். இதனை,

"சார்பினாற் றோன்றாது தாளருவா யெப்பொருட்கு
மேயநின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ
வாய்மொழியால் வாக்கான் மனத்தா னறிவிழந்த
தூய்மையதா மைதீர் சுடர்."

எனவும்,

"உற்ற வாக்கையி னுறுபொரு ணறுமல
ரெழுதரு நாற்றம்போற்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொரு
ளப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும்
பித்தர்சொற் றெளியாமே
யத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய
வதிசயங் கண்டாமே."

எனவும், அதனையறிந்த பெரியோர் கூறியவாற்றானறிக. எனவே, திருமுருகாற்றுப்படை யென்பதற்கு, முத்தியைப் பெற்றானொருவன், பெறுதற்குப் பக்குவனாகிய ஓரிரவலனை, அது பெறும்பொருட்டு, ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமியிடத்தே வழிப்படுத்தலையுடைய பிரபந்த மெனப் பொருள் கூறுக.

---

வேலுமயிலுந் துணை

# இப் பிரபந்தத்தின் தாற்பரியம்.

சுப்பிரமண்ணிய சுவாமியுடைய திருவடிகளைச் சிந்திக்கும் தலைமைபெற்ற உள்ளத்துடனே புண்ணியங்களை விடாது செய்யும் கோட்பாட்டினாலே விளையாநின்ற மெய்ஞ்ஞானத்தைச் சாதித்து, அத் திருவடிக்கீழ் இருக்கும் நெறியை நீ விரும்பினையானால், நீ முற்பிறப்பிலே நினைந்து செய்த புண்ணியங்களினாலே அநித்தியமாகிய இம்மை மறுமையின்பங்கள் பலவற்றையும் உவர்க்கின்ற நன்மையாகிய மனசிலே கிளர்ந்த இனிமையாகிய இந்த மோக்ஷ இச்சையினாலே சிலஞானம் இப்போதே வாய்க்க, அது காரணமாக முத்தியைப் பெறுவாய். நீ பரம சற்குரு நாதராகி அக் கடவுளை அடைந்து வழிபட்டே அதனைப் பெறவேண்டுமாகையால், அவர் விசேஷமாக எழுந்தருளியிருக்கும் புண்ணிய ஸ்தலங்களைச் சொல்வேன்; கேள்! அவர் திருப்பரங்குன்றின்கண்ணே எழுந்தருளி யிருத்தலும் உரியர்; அதுவன்றித் திருச்செந்தூருக்கு எழுந்தருளுதலும் அவருக்கு நிலைபெற்ற குணம்; அதுவன்றித் திருவாவினன்குடியின் கண்ணே எழுந்தருளியிருத்தலும் உரியர்; அதுவன்றித் திருவேரகத்தின் கண்ணே எழுந்தருளியிருத்தலும் உரியர்; அதுவன்றி, மலைதோறும் விளையாடுதலும் தமக்கு நிலைநின்ற குணமாம்; அதுவன்றி, ஊர்தோறு ஊர்தோறும் எடுத்துக்கொண்ட திருவிழாவிலும், தம்மேல் அன்புடையவர்கள் துதித்தலால் தமது திருவுளம்விரும்பியஇடத்திலும், படிமத்தான் செய்த வெறியாடு களத்திலும், காட்டிலும், சோலையி

லும், ஆற்றிடைக்குறையிலும், நதிகளிலும், குளங்களிலும்; வேறு பல ஊர்களிலும், நாற்சந்தியிலும், முச்சந்தி ஐஞ்சந்திகளிலும், கடம்பிலும், ஊருக்கு நடுவே எல்லோருமிருக்கும் மரத்தடியிலும், அம்பலத்திலும், ஆத்தீண்டு குற்றியையுடைய இடத்திலும் எழுந்தருளி யிருத்தலும் உரியர், அதுவன்றி, குறப்பெண்ணானவள் தாம் வரும்பொருட்டு வழிப்படுத்திய ஊரின்கண்ணே, தம்மைவிரும்புகின்றவர்கள் வரங்களை விரும்பியபடியே பெற்று நின்று வழிபட அவ்விடத்திலே அவரை ஆட்கொண்டு எழுந்தருளியிருத்தலும் உரியர்; நான் உனக்கு அறிவித்தபடியே அவ்வவ் விடங்களிலே ஆயினுமாகுக, பிறவிடங்களிலே ஆயினுமாகுக; முற்பட நீகண்ட பொழுது முகமலர்ந்து துதித்து, பின்பு கையைத் தலையிலே குவித்து வாழ்த்தி, பின்பு அவருடைய திருவடிகள் உன்னுடைய தலையிலே படும்படி வணங்கி,—அன்று நான் உனக்கு அறிவித்த அளவினாலும், நீ அறிந்த அளவினாலும் நீங்காது பலவற்றையுங் கூறிப் புகழ்ந்து, உம்முடைய தன்மைகளெல்லாவற்றையும் முற்ற அளவிட்டறிதல் உயிர்களுக்கு அரிதாகையால் "உம்முடைய திருவடியைப் பெறல்வேண்டு மென்று நினைந்து வந்தேன்; உம்மோடு ஒப்பவர் இல்லாத மெய்ஞ்ஞானத்தையுடையவரே!" என்று நீ கருதிய வீடுபேற்றை விண்ணப்பஞ் செய்வதற்கு முன்னே, அவருடைய பரிஜனர்கள் சேரக்கருதித் தோன்றி, "சுவாமி! அறிவு முதிர்ந்த வாயினையுடைய

---

"நன்முக மிருமூன் றுண்டான மக்கவைதா மேகந்தன்
தன்முக மாகியுற்ற தாரகப் பிரமமாகி
முன்மொழிகின்ற நந்த மூவிரண் டெழுத்துமொன்று
யுன்மகனுமத் தோராறெழுதெனை வுற்றவன்றே"
— கந்தபுராணம்.

புலவனொருவன் உம்முடைய புகழை விரும்பிக் கேட்போர்களுக்கு இனியனவும் உறுதிபயப்பனவுமாக மிக்கபலவற்றை வாழ்த்திவந்தான்; ஆதலால், அவன் உம்மாலே காக்கப்படத் தக்கவன்" என்று கூற, பழமுதிர்சோலைமலைக்கு உரியவராகிய அம்முருகக்கடவுள் வந்து சேர்ந்து, அச்சம் பொருந்தும் தெய்வத்தன்மையை உள்ளடக்கிக்கொண்டு, தம்முடைய இளைய வடிவத்தைக் காட்டி, "முத்திபெறநினைந்து வந்த நின் வரவை யாம் அறிவேம்; அது உனக்கு எய்துதல்அரிதென்று அஞ்சுதலைப்பரிகரி" என்று, உன்மேல்அன்பினையுடைய நல்லவார்த்தைகளைப் பலதரமும் கலந்து பேசி, உலகத்தின் கண்ணே நீயொருவனே பிறர்க்கு வீடளித்தற்கு உரியவனாகக் கேடின்றித் தோன்றும்படி, திருவருளாகிய பரிசிலைத் தந்தருளுவார் என்பதாம்.

இதனால், முத்தியைப்பெற்றவன் ஒருவன், பெறுதற்குப் பக்குவனாகிய ஓர் இரவலனை, அது பெறும்பொருட்டு முருகக்கடவுளிடத்தே வழிப்படுத்ததாக இப் பிரபந்தம் செய்யப்பட்டமை தெளிக.

---

" அறிகிலமிந் நான்காறு மகிலமுநீயே யாகி
யுறைதரு தன்மைநீ வந்துணர்த்தலி னுணர்ந்தாமன்றே
பிறவொரு பொருளுங்காணோம் பெருமநின் வடிவமன்றிச்
சிறியம்யா முணர்துதோற்றந் தெரிந்திட வல்லமோதான் "

" ஓங்கார மூலப்பொருளாயு பார்தோறுமென்றும்
நீங்காதமருங் குமரேசனை நெஞ்சினுன்னி
யாங்கா குவதோரவன் மந்திரமன்பினோதித்
தீங்காமவுணர் செறிகாப்பகஞ் சென்றுபுக்கான் "

— கந்தபுராணம்.

ஓம்:

முருகன் துணை.

# திருமுருகாற்றுப்படை

## —: ஆராய்ச்சியும் :—

## ஆறுபடை வீட்டுகளின் விளக்கமும்

[பண்டிட் - S. R. நமசிவாய ராஜயோகியார்
அவர்களால் தொகுக்கப்பட்டது.]

திருமுருகாற்றுப்படை என்னும் நூலுக்கு, புலவராற்றுப் படைஎன்றும் பெயர் சொல்லுவார்கள். இது "பத்துப்பாட்டு" என்னும் வகையினில் ஒன்றாகும். திரு—முருகு—ஆற்று—படை என நான்கு பதங்களாகப் பிரித்துப் பொருள் கூறுதல் பொருந்தும். "முருகு" என்னும் பதம் அழகு - இளமை - தெய்வத்தன்மை முதலியபல பொருளைஉள்ளடக்கி நிற்கிறது. அதனால், முருகனது அருள் பெற்றான் ஒருவன், அவன் அருள் பெறுதற்குரிய மற்றொருவரை முருகப் பெருமானிடத்தில்செலுத்துதல் என்னும் பொருள் கூறுதல் மிக நன்று. இந்நூல் 317 அடிகளைக் கொண்டது. பாராயணத்துக்குரிய சிறந்த நூலாகும்.

---

நக்கீரர் இவர் வாழ்க்கையின் முற்பகுதி பண்டித விவகாரங்களிலும் லௌகிக விஷயங்களிலும் பெரும்பாலும் கழிந்திருக்க வேண்டுமென்ற ஊக்கத்திற்கு ஆதாரமாகிறது. இவர் தந்தையார் மதுரைக் கணக்காயனார் (அதாவது, மதுரை உபாத்தியாயர்) என்று பெயர் பெற்றிருந்தார். அவர் குமாரரான இவரோ தமது புலமைத் திறத்தாலும் மன உறுதியாலும் கடைச் சங்கத்திற் கேதலைவரானார். வடமொழியிலும் மிக்க பயிற்சியுள்ளவரென்று தெரிகிறது. இவருடைய நுண்ணறிவும் புலமையும் உறுதியும் ஒழுக்கமும் பக்தரான நக்கீரரை நக்கீரதேவ நாயனாராகப் பரிணமிக்கச் செய்தன.

இந்நூலை இயற்றியவர் மதுரை கடைச் சங்கப் புலவருள் ஒருவர். நக்கீரர் என்னும் நாமதேய முடையவர். கணக்கநாயனார் மகனார். நெடுநல்வாடை இறையனாரகப் பொருள் உரை முதலியவற்றுக்கு ஆசிரியர். இவரை நக்கீர தேவ நாயனார் என்றும் சொல்லுவார்கள். இந்நூல் முருகன் பால் பேரன்பு கொண்டு, அப்பெருமானது திருவருள்பெற்று விளங்கிய ஒருவரால் எழுதப் பெற்றதென்பதை யாவரும் ஒப்புவார்கள்.

---

சுமார் 2000 - ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் மக்கள் நாகரிகத்தில் உயர்ந்து தொழில் வியாபாரம் ஆட்சி முறை கல்விப் பயிற்சி முதலியவற்றில் சிறந்து விளங்கினார்கள். தமிழர்களின் லௌகிக நாகரிகம் உச்சநிலை அடைந்திருந்த காலத்தில் நக்கீரர் வாழ்ந்தார். சுமார் பதினெட்டு நூற்றாண்டுகளுக்கு முன் என்று சொல்லலாம். அந்நாகரீகப் போக்கைச் சங்க நூல்களின் வாயிலாகப் பார்க்கும்போது, அந்நாளில் தெய்வ பக்தி சுலபமாகப் பரவியிருக்க முடியாதென்றே தோன்றுகிறது. எத்தனையோ கோவில்களும் விழாக்களும் தோன்றிய பிற்காலத்தில், சமய உணர்ச்சி அபிவிருத்தி அடைந்ததில் ஆச்சரியமில்லை. ஆதிகாலத்தில் இருந்த உணர்ச்சியை வடநாட்டு வைதிக மதம் தமிழர் கொள்கைகளோடு கலந்து வளர்த்திருக்க வேண்டும். இந்த வளர்ச்சிக்குப் பேருதவி செய்தவர்களில் நக்கீரர் ஒருவர். இயற்கையில் நடைபெறும் விஷயங்கள் தாறுமாருகத் தலைவிரித்தாடும் போயாட்டம் போலத் தோன்றினாலும், உண்மையில் தாளத்துடனும் ராகத்துடனும் இயங்கும் நடனமே பிரபஞ்சம் என்ற பெருங் கொள்கைக்கு அஸ்திவாரக்கல் நாட்டினார் இவர் என்று சொல்லலாம்.

— பி. ஸ்ரீ. (ஆ. வி.)

இந்தக் காவியத்தை நக்கீரர் இயற்றியதற்குக் காரணம், திருப்பரங்குன்றப் புராணத்துள் ஒருவகையாகவும், சிகாளத்திப் புராணத்துள் ஒரு வகையாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. காளத்தி புராணத்தில் சொல்லியிருப்பது, திருவிளையாடற் புராணம், தருமி என்னும் ஏழைப் பிராமணனுக்கு பொற்கிழி அளித்த மூலக் கதைக்கு முற்றிலும் மாறுபட்டிருப்பதால், திருப்பரங்குன்றத்துப் புராணத்தில் சொல்லியிருப்பதைக் கவனிப்பாம்.

"புங்கவர்களிருள் கிழித்த மணிபதிந்த கோபுரங்கள் பொலிந்த கூடல், அங்கயற்கண் பாகனன்றி மானிடரில் மாறனன்றி அகிலந்தன்னுட், டுங்கமெழும் தமிழ் மாலை தொடுப்பதில்லை யென்று கொண்டான் றாயரேனும் வெங் கொடுமை வருங்காலம் அறிகுவரோ குமர னருள் மேவிலார்கள்."

இப்பாசுரத்தின்படி நக்கீரதேவர், ஓர் காலத்தில் மதுரையம்பதி ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரக் கடவுள், மனுஷ்ய வருக்கத்தில் பாண்டியன், இவர்களிருவர் பேரிலன்றி, ஏனைய ஏத்தகையோர் பேரிலும் தாம் பாமாலை தொடுப்பதில்லை யென்று விரதம் பூண்டிருந்ததாகவும், அவ்விரதத்தினை பங்கம் செய்வதற்காக முருகக்கடவுள் அந்த நக்கீரர் பேரில் குற்றம் சாட்டி, அவரைத் திருப்பரங்குன்றத்தில் ஓர் குகையில் சிறை செய்வித்து, அந்தச் சிறை மீட்சிக்காக, இந்தத் திருமுருகாற்றுப்படை என்னும் பிரபந்தத்தை முருகக்கடவுள் பேரில் பாடிவித்ததாகவும், சொல்லப்பட்டிருக்கிறது. இந்த

---

"கோலநீடிய நிதிபதிவாழ்க்கையுங் குறியேன்
மேலையிந்திர னரசினைக்கன விலும்வெஃகேன்
மாலயன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சாலநின்பதத் தன்மையே வேண்டுவன் றமியேன்"

— கந்தபுராணம்.

வாதத்துக்கு அநுகுணமாக, திருப்பரங்குன்றத்தைப் பற்றி முதலில் சிறப்பித்துப் பாடியதாகவும் சொல்லுகிறார்கள்.

மற்றொருவகை; இமயமலைச் சாரலில், ஒரு தடாகக்கரையில், ஓர் ஆல விருக்ஷத்தின் கீழ், நக்கீரர் சிவ பூஜை செய்து கொண்டிருக்கும் பொழுது, அம் மரத்திலிருந்த ஓர் பழுத்த இலையின் ஒரு பாதி ஜலத்திலும், மற்றொரு பாதி கரையிலுமாக வீழ்ந்தன. நீரில் விழுந்த பாதி மீன் வடிவமாக புறத்தே விழுந்தபாதி பறவையாய் மீனைக்கௌவிக்கொண்டு இழுத்துக் கொண்டிருக்க, இந்தக் காட்சியை நக்கீரர் சிவ பூஜா தியானத்தை விட்டுக் கவனிக்கலானார். இதற்கு முன் இவ்வாறு சிவ பூஜை தவறிய 999 பேர்களை ஒரு குகையில் அடைத்து, இன்னும் ஒருவர் வேண்டுமெனக் காத்திருந்த ஒரு பூதம், நக்கீரரையும் கொண்டுபோய், அக் குகையில் அடைத்து, தான் கொண்ட விரதப்படி, இவ் ஆயிரம் பேரையும் சாப்பிடுதற்கு முன், நீராடப் போயிற்று.

அச் சமயத்தில் அக் குகையில் சிறை வைக்கப் பட்டிருந்த 999 பேரும், நக்கீரர் வருகையால், தாங்கள் யாவரும் இறக்க நேரிட்டதே யென்று புலம்ப, நக்கீரர், அவர்களது புலம்புதலைக்கேட்டு, விஷயத்தை அறிந்து, இரக்கங் கொண்டு, "திருமுருகாற்றுப்படை" என்னும் இப் பிரபந்தத்தைப் பாடி அருளினார். உடனே முருகக்கடவுள், நீராடப் போயிருந்த அந்தப் பூதத்தினைச் சங்கரித்து, ஆயிரம் பேரையும் சிறை விடுத்துக் காப்பாற்றினார்.

---

" ஆயிரங்கோடி காமரழகெலாந் திரண்டொன்றாகி
மேயினவெனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந்தன்னில்
தூயநல் லெழிலுக்காற்றா தென்றிடினினைய தொல்லோன்
மாயிரு வடிவிற்கெல்லா முவமையார் வகுக்க வல்லார் "

— கந்தபுராணம்.

இவ் விருவகையினும் எவ்விதமாயினும் ஆகுக. நக்கீரர் தாம் கொண்ட "நான்" என்னும் அகங்காரத்தி லிருந்து விடுபட்டு, மோக்ஷமாகிய வீட்டை அடைய முயன்ற ஓர் வகை சாதனமாக, இந்தப்பிரபந்தத்தைப் பாடினார் என்பதை யாவரும் ஒப்புக்கொள்ள வேண்டியதாகிறது. ஆழ்ந்து யோசிக்குமிடத்து, தருமி என்னும் ஏழைப்பிராமணனுக்கு மதுரையம்பதியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிராநின்ற ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேசுவரர் பொற்கிழி பெறுவதற்காக எழுதிக்கொடுத்த பாசுரத்துக்கு அகந்தையினால் குற்றம் சொன்ன தோஷத்துக்காக ஏற்பட்டசாபத்தாலேயே பூதத்தின் கையில் அகப்பட்டுக்கொண்டு வருந்தினாரென்பதும், ஸ்ரீசுப்பிரமண்யக் கடவுளைத்தோத்திரித்துப்பாடிய இப் பிரபந்தமே அவருடைய கஷ்டத்தை நிவிருத்திற்றென்பதும் வாஸ்தவமே ஆதலால், ஒவ்வொருவரும் இப்பிரபந்தத்தை பக்தி சிரத்தையோடு பாராயணம் செய்யும் பக்ஷத்தில், இகத்தில் சகலவித உலக கஷ்டங்களினின்றும் விடுபட்டு, முடிவில் சர்வ துக்க நிவிருத்தி பரமாநந்தப் பிராப்தியாகிய மோக்ஷ பதவியை அடைவார்களென்பது நிச்சயம்.

இப்பிரபந்தத்தில் ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள் பக்தகோடிகளை இரக்ஷிப்பதற்காக எழுந்தருளியிருக்கும் முக்கியமான இடங்கள், அப்பெருமானது இயல்பு-புகழ் முதலியவற்றை விளக்கி, அவரை வழிபடும் மார்க்கத்தால், அவரது திருவருளைப் பெறலாமென்கிற உறுதி முதலியன மிக்க அழகாக வருணிக்கப்பட் டிருக்கின்றன.

---

"நாரணனென்னுந்தேவு நான்முகத்தவனு முக்கட்
பூரணன் றானுமாகிப்புவிபடைத் தளித்து மாற்றி
யாரணமுடிவுந்தேரு வநாதியா யுயிர்கட்கெல்லாங்
காரணனாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்"

— கந்தபுராணம்.

ஸ்ரீ சுப்பிரமண்யக்கடவுள் அண்டபிண்ட சராசரப் பொருள்களிலும் அந்தர்யாமியாய் வீற்றிருப்பினும், இந்தப் பிரபந்தத்தில் சொல்லியுள்ள ஆறு தலங்கள் முக்கிய ஸ்தலங்களாக நக்கீரர் எடுத்துக்கூறியிருப்பதால்,

“ மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புண்மிசை கொடியோனும் புங்கவமூர்வோனும்
மலர்மிசை முதல்வனும்.....................
பற்றுகின்று நீன்காரணமாகப் பரங்குன்று. ”

— பரி பாடல் 8 - செய்யுள்.

“ பலர்புகழ் மூவருந் தலைவராக
ஏமு றுஞாலந் தன்னிற் றோன்றி
அந்தரக்கோட்பினர் வந்துடன் காண
ஆவினன்குடி யசைதலு முரியன். ”

— திருமுருகாற்றுப்படை.

இந்தத் தலங்களில் பிரமாதி தேவர்கள்-சித்தர்கள்-முனிவர்கள் - ரிஷிகள் - மனுஷ்யர்கள் - விலங்குகள் முதலியோர் தங்கித் தவம்செய்து, பல வகைப்பேறுகளைப் பெற்றுள்ளார்கள் என்று ஏற்படுகிறது. அவ்வாறு தலங்களாவன:—

(1) திருப்பரங்குன்றம். (2) திருச்சீரலைவாய். (3) திரு ஆவினன்குடி. (4) திரு ஏரகம். (5) குன்றுதோறாடல். (6) பழமுதிர்சோலை. என்பனவாம். இதன் விளக்கத்தை ஒரு வாறு சுருக்கிக் கூறுவாம்.

---

“ திருமுகங்களோ ராறுளன் றீவினை யனைத்தும்
பொருது வென்றுள பன்னிரு புயமுளன் புலரிப்
பரிதி யாயிரமென்ன நின்றிமைப்பது பணியார்
குருதியூற்றெழு வேற்படை திருக்கரங் கொளுநும் ”

— உபதேச காண்டம்.

“ அறுவகைச்சமயமும் நெறிமையில் வகுத்தான் ”

— நக்கீரர்.

(1) திருப்பரங்குன்றம்.—மதுரைக்கு மேற்கே மூன்று நாழிகை வழி தூரத்திலிருக்கிறது. இது பராசரர் புத்திரர்களை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகள் காத்தருளிய ஸ்தலம். தவிர, அவர் சூரபத்மன் முதலிய அசுரர்களைக்கொன்று, இந்திராதி தேவர்கள் சிறையை மீட்டு, அவர்களைத்தேவலோகத்துக்கு அனுப்பிய காலத்தில், தேவேந்திரன் இவரது பராக்கிரமத்துக்கு மகிழ்ந்து தன் புத்திரியாகிய தெய்வயானை அம்மையாரை, அவருக்குப் பாணிக்கிரஹணம் செய்து கொடுத்த ஸ்தலம் இதுவாகும். "முருகா முருகா" என்று அல்லும் பகலும் சொல்லி வந்த ஒரு பெண்ணின் கணவன், அந்நாமத்தை விடுத்துத் தன் பெயர் கூறப்பலமுறை சொல்லியும், அவர் கேளாமல் "முருகா" என்று மீண்டும் சொல்லி வந்ததற்காக, அப்பெண்ணினது கைவிரலைச் சேதிக்க, அந்த விரலானது முருகப்பெருமானது திருவருளால் முன்போல் வளரப்பெற்ற மஹிமைவாய்ந்த தலம் இதுவே.

"ஒருமுருகா என்றென னுள்ளங் குளிர உவந்துடனே
வருமுருகாவென்று வாய் வெருவா நிற்பக் கையிங்ஙனே
தருமுருகாஎன்று தான்புலம்பா நிற்பத் தையன்முன்னே
திருமுருகாற்றுப் படையுடனே வரும்சேவகனே."

தவிர, நக்கீரர் உட்பட ஆயிரம் முனிவர்களை பூதமானது குகையில் அடைத்து வைத்தது, திருப்பரங்குன்றத்து மலைக்குகையிலென்று சொல்லுகின்றார்கள். அதற்கு அநுகுணமாக இந்த க்ஷேத்திரத்தில் பங்குனி மாதத்தில் நடக்கும் பிரம்மோற்சவம் நான்காம் திருவிழாத்தினத்தன்று, நக்கீர

---

நக்கீரர் திருவுருவத்தைத் திருப்பரங்குன்றத்தில் முருகக்கடவுளின் பக்கத்திலே இன்றும் பார்க்கலாம் - மதுரையிலும் நக்கீரருக்கு ஒரு கோவில் உண்டு: அது சங்கத்தார் கோவில் என்று சொல்லப்படுகிறது. — பி. ஸ்ரீ. (ஆ. வி.)

ரைச் சிறைமீட்ட உற்சவம், வெகு விமரிசையாய்ப் பிரதி வருஷமும் நடைபெறுவதைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கலாம். இதுவன்றி, இந்தத்திருப்பரங்குன்றத்து மலையினுச்சியில், ஒரு பெரிய கற்பாறையின் கீழுள்ள ஒரு குகையில், நக்கீரர் உட்பட ஆயிரவர்களை அடைத்து வைத்திருந்ததாகவும், அதை முருகப்பெருமான் தன் வேலாயுதத்தால் பிளந்து, அம்முனிவர்களை வெளியாக்கியதாகவும் சொல்லுவதற்கிணைய, அப்பாறை இரு கூறாகப்பிளந்திருக்க நாளைக்கும் பார்க்கலாம். இந்த மலையை மகம்மதியர்கள் "சிக்கந்தர்" மலையென்று சொல்லுகிறார்கள். இந்த மலையிலுள்ள மூலஸ்தானத்திலுள்ள மூர்த்தி விக்கிரகம், மற்ற ஸ்தலங்களைப் போலில்லாமல், மலையிலே குடைந்து, உருவமைக்கப் பட்டிருக்கிறது. இது பிருதிவி மயமென்று கூறுவதால், தீர்த்தத்தினாலும் மற்றைய திரவியங்களினாலும் அபிஷேகம் செய்வதில்லை. வருஷத்துக்கு இருமுறை மட்டும், புனுகு சட்டம் சேர்ந்த வாசனைக்குழம்பினால் அபிஷேகம் செய்கிறார்கள். இந்த ஸ்தல மூர்த்திக்குக் கந்தன் என்று பெயர். நக்கீரர் மதுரை வாசியாயுள்ள கணக்காய நாயனார் புதல்வராதலால், தான் ஜெனித்த மதுரை க்ஷேத்திரத்தைப் புகழ்ந்து, அதற்கடுத்தது திருப்பரங்குன்றம் என்பதை, இப்படை வீட்டில் சொல்லியிருக்கிறார் என்பார்கள்.

(2) * திருச்சீரலைவாய்:—இந்த க்ஷேத்திரத்தைத் திருச்செந்தூர் - திருச்செந்தில் - கந்தமாதனம் - சந்தனாசலம் என்று சொல்வார்கள்.

இது, திருநெல்வேலிக்குத் தெற்கு மூன்று காத தூரத்தில், சமுத்திர தீரத்திலுள்ளது. வியாச மஹரிஷியால் உப

* இதன் விரிவை, திருச்செந்தூர் ஸ்தலபுராணத்திற் காண்க.

தேசிக்கப்பெற்ற சுகப்பிரம்ம ரிஷி - நாரதரால் உபதேசிக்கப் பெற்ற வெள்ளையானை இவர்கள் பூஜித்து அநுக்கிரகம் பெற்ற ஸ்தலம். தேவர்களது துன்பங்களைப் போக்கும் பொருட்டு, சூரபத்மன் - சிங்கமுகாசுரன் - தாருகாசுரன் - பானுகோபன் முதலிய அசுரர்களைச் சம்ஹாரிப்பதற்காக, வீரவாகு தேவர், வீரகேசரி - வீரமாஹேந்திரன் - வீரமா கேஸ்வரன் - வீரபுராந்தகன் - வீர ராக்ஷசன் - வீரமார்த் தாண்டன் - வீராந்தகன் - வீரதீரன் ஆகிய நவ வீரர்களும்-, பூத கணத்தலைவர்களும் - யக்ஷ வீரர்களும் போர்க்கோலங் கொண்டு எழுந்தருளியிருந்த தலம். இது பஞ்சபூதங்களில் அப்பு ஸ்தலமாகச் சொல்லவேண்டும். இதில் முருகப்பெரு மான் ஆறு திருமுகங்களின் தன்மையையும், தொழிலையும், பன்னிருகைகளின் வேலைகளையும் ஒருவாறு குறிப்பிட்டுள் ளார். அவ்வாறு திருமுகங்களுள் ஒன்று பிரணவம். மற்ற ஐந்தும் இச்சா சத்தி - ஞான சத்தி - கிரியா சத்தி - பரா சத்தி - ஆதி சக்தி (சித் சத்தி) களாய் விளங்குவதைக் குறிப்பிடுகிறார்.

திருச்செந்தூர், தமிழ் நாட்டில் மிகவும் பழைமையா னது. அது முருகக்கடவுள் எழுந்தருளியுள்ள ஸ்தலமாகும். சமுத்திரத்தில் அலைகள் மோதுமிடத்துள்ள இடத்தில் இக்

---

☞ திருமுருகாற்றுப்படை வீட்டுகளில் திருச்சீரலை வாய் - (திருச்செந்தூரி)ல் கடல் கரையில் கடல் அலை சுவற்றில் மோதுவதால் அலைவாய் (அலைவாய்த்திருத்தும் தலம்.) என்று சங்ககாலத்தில் பெயர் பெற்றிருந்தது. முருகக் கடவுளின் ஆறுபடை வீட்டுகளில் இங்கே (திருச்செந்தூரில்) தேவசேனா பதியாகிச் சூரபத்மன் சிங்கமுகன் முதலிய அசுர ஸர்வாதி களை ஜயித்துச் தேவேந்திரனுக்கு ராஜ்யபாரம் அளித்தா ரென்று புராணம் கூறுகிறது. — பி. ஸ்ரீ. (ஆ. வி.)

கோயிலிருப்பதால், அலவாய் எனப் பெயர் பெற்றுள்ளது. இந்த ஸ்தலம் சுமார் இரண்டாயிரம் வருடத்துக்கு முன்னமே, தொல்காப்பியர்காலத்தும், கடைச் சங்ககாலத்தும், புகழ் பெற்று விளங்கிற் றென்பார்கள். சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளும் திருச்செந்தூரைப் புகழ்ந்து பாடியுள்ளார். "செந்திலும் செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன்" என்று குறவர்கள் குன்றக்குரவையில் பாடியிருப்பதாகக் கூறப் படுகிறது.

இவ்வூரில் ஆறுமுக நயினுர் என்கிற முருகக்கடவுளுக்குத் தனிக் கோயில் கோபுரத்துடன் உண்டு. பெரிய வாசலும் அதற்குத்தான். எல்லோரும் சண்முக விலாசத்திருந்து, குலம் மதம் வேறு பாடின்றிக் கண்டு வழிபடத் தக்க வழியில் அமைந்துள்ளது. மாசி - பங்குனி மாதங்களில் நடக்கும் திரு விழாக்களில் 7-ம் நாள் மட்டும், ஆறுமுக ஸ்வாமி உற்சவம் நடைபெறக் காணலாம். சுமார் 1500-வருடங்களுக்கு முன், இக் கோயில் கல் கட்டடமாக அமைக்கப்பட்ட தென்கிறுர்கள்.

இவ் வாலயம் முதலில் ஓதுவார் மூர்த்திகள் மூலம் பூஜை முதலிய நடந்து வந்ததாகவும், கொற்கைப் பாண்டியன் காலத்தில், அவராதரவில் கொற்கைக்குப் பக்கத்தில் முக்காணி என்கிற ஊரிலிருந்த பிராம்மணர்கள், முருகன் பூஜையினை நடத்தியதாகவும், அக் காலம் சுமார் 2000 வருடங்களாக இருக்கலாம்என்றும்யூகிக்கலாம். முக்காணி என்கிற ஊரி

---

"காமதேனு முதல வாறுங்கனிதரும் பருவமாறும்
ஓமெனும் பொருண் முன்னுன உயர்தருகோசமாறுந்
தோமறு சுவைகளாறுஞ் சூத்திரமாறு மாகத்
தாமொரு வடிவமான சண்முக சரணம் போற்றி"

— திருச்செந்தூர்ப் புராணம்.

லிருந்து வந்தவர்களாதலால், முக்காணிப் பார்ப்பார் என்ன லாம். இப்போது மலையாளம் நம்பூதிரிப் பார்ப்பார் மூலமாக பூஜை நடக்கிறது. ஸ்தானிகர் முக்காணியர். ஓதுவார் மூர்த்திகள் பூ தொடுப்பதும், இலையில் விபூதி மடித்துப் பட்டரிடம் கொடுப்பதுமா யிருக்கிறார்கள்.

(3) * திருவாவினன் குடி:— இது பழனி மலையாகும். இதில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருப்பது பால சுப்பிரமண்யக்கோலம். இலக்ஷ்மிதேவி - காமதேனு சூரிய பகவான் - பூதேவி - தேவேந்திரன் முதலியவர்கள் பூஜித்து பேறு பெற்ற ஸ்தலம். அது பஞ்சபூதங்களுள் தேயு ஸ்தல மாகச் சொல்லுவார்கள். இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி சதாகாலம் தேஜோன்மயமாய் விளங்குவதைத் தரி சிப்போர் அனைவரும் கண்கூடாகக் காணுவர்.

(4) † திருவேரகம்:—இதை சுவாமி மலையென்று சொல் வார்கள். கும்பகோணத்துக்கு மேற்கு, 2-நாழிகை வழி தூரத் திலிருக்கின்றது.

ஓர் காலத்தில் பிரமதேவன் ஸ்ரீ கைலையங்கிரிக்குச் சிவ பெருமான் தரிசனம் செய்யப்போகும்போது, கோபுரவாயி லில் விளையாடிக் கொண்டிருந்த ஸ்ரீ சிவசுப்பிரமணியக் கட வுளை சிறு பிள்ளையென நினைத்து, அலக்ஷியமாக வந்தனம் செய்யாதுபோக, சுப்பிரமணியர் பிரமனை அழைத்து, நீயார்? என்று வினவவும், பிரமன் சகல வேதங்களுக்கும் அதிகாரி- சகல ஜீவராசிகளுக்கும் சிருஷ்டிகர்த்தா என்னலும், முருகப் பெருமான் புன்னகையோடு, வேதத்துக்கு மூலாதாரமாகிய பிரணவத்துக்குப் பொருள் யாதென்ன? பிரமன் விடை கூறச் சக்தியற்று விழிக்க, முருகன் பிரமனைச்சிரசிற்குட்டிச் சிறை யிலிட்டார். பிரமன் செய்யவேண்டிய சிருஷ்டித்தொழிலைத்

---

* இதன் விரிவை பழநி ஸ்தலபுராணத்திற் காண்க.

† இதன் விரிவை திருவேரகம் ஸ்தலபுராணத்திற் காண்க.

தாமே நடத்தினர். ஈதறிந்த, சிவபெருமான், பிரமனைச் சிறையினின்று விடுவிக்க, நந்தி தேவர் மூலமாகச்சொல்லி அனுப்பியும், முருகப்பெருமான் கேளாமையால், சிவபெருமானே நேரில்வந்து, நடந்த விஷயங்களைக் கேட்டறிந்து, முருகப்பெருமானை நோக்கி, அப்பா! பிரணவப்பொருளை அறிவிக்க உன்னால் முடியுமா ? என்று கேட்டார். முருகன் கிரமப்படி கேட்டால், சொல்லக்கூடும் என்றார். அவ்வாறே சிவபிரான் முருகனை எடுத்து மடியில் வைத்து, குருசிஷ்யபாவனையாகக்கேட்க, முருகன் சிவபெருமானுக்கு உபதேசித்தார். இந்த ஐதீகத்தைக்காட்டும் ஸ்தலம் திருவேரகம்.

சிவபெருமானுக்கு ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள் பிரணவத்தின் சப்தமானது, ஷட்ஜம் - இரிஷபம் - காந்தாரம் - மத்யமம் - பஞ்சமம் - நிஷாதம் - தைவதம் - ஆகிய ஏழு முக்கிய சுரங்களையுடையது. ஆறு எழுத்தடங்கிய மந்திரம் "குமாராய நம" என்று சொல்லுகிறார்கள். சிலர் "சரவணபவ" என்றும் சொல்லுவதுண்டு. இந்த மந்திரங்களைச் சொல்லும்போது, "ஓம்" என்னும் பிரணவமும் சேர்த்துச் சொல்லுவதுண்டு. பிரணவம் சேராத மந்திரம் எதுவும் பலிதமாகாதென்று பெரியோர் சொல்லுவார்கள். இதனால், சப்தம் அதாவது நாதரூபமான தாரக மந்திரமே, இந்த ஸ்தலத்துக்குரிய முருகக்கடவுள் விரும்பிய விசேஷப்பொருள் என்று ஏற்படுகிறது. இந்த மந்திரத்தை உச்சரித்தலையும் மற்ற மந்திரங்களால் அருச்சித்துத் தம்மைப் புகழ்ந்து துதித்தலையும் திருச்செவி சாத்திக்கேட்டு மகிழ்ந்திருத்தலால், இது ஆகாய பூத

---

" வேதக்காட்சிக்கு முபநிடத்துச்சியில் விரித்த
போதக்காட்சிக்குங் காணலன்புதியரிற் புதியன்
மூதக்கார்க்கு மூதக்கவன் முடிவிற்கு முடிவா
யாதிக்காதியா யுயிர்க்குயிராய் நின்ற விமலன் ".

— கந்தபுராணம்.

ஸ்தலமென்று நிச்சயித்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. கந்தப்புராணத்தில் ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியர் அவர்கள் இந்த ஸ்தலத்தில், கடவுள் தாரக ரூப மெய்தியுள்ளாரென்பதை அறிவிக்கும்.

" ஈரகத்தேதனை நினையு மன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடும்
தாரகத் துருவமாம் தலைமை எய்திடுய
ஏரகத்தறுமுகனடிகளேத்துவாம் "

(5) குன்று தோருடல்:—வாயுவானது சமஸ்த இடங்களிலும் வியாபித்து நிற்பதால், முருகக்கடவுள் குன்று தோறும் வீற்றிருப்பார் அதனால், இது வாயு ஸ்தலமென்று சொல்வார்கள். தவிர, மலைநாடுகளுக்கெல்லாம் ஸ்ரீ சுப்பிரமணியரே தெய்வம். இதற்குப் பிரமாணம்,

" காடாடு முல்லைக் கழிநெய்தலாகுங்கல்லாங் குறிஞ்சி
நாடா மருதம் நடலை வெம்பாலையந் நாட்டுத் தெய்வம்
கோடா கரன் வருணன் குகன் இந்திரன் கூறு துர்க்கை
மாடாயர் மீன் புல்லர் குன்றலர் நாடர் மறவருமே."

(6) பழமுதிர்சோலை:—இத்தலம் மதுரைக்கு ஒன்றே கால் காத தூரத்தியிருக்கிறது. இது, திருமாலிருஞ்சோலை - சோலைமலை - கள்ளர் அழகர் கோயில் என்னும் பெயர்களால் வழங்கி வருகிறது. அருணகிரிநாதர் இந்தத் தலத்தை சுப்பிர

---

சோலைகளையுடைய மலைக்கு அதிபதி முருகக்கடவுள் - பழமுதிர் சோலை மலைகிழவோனே என்பது பொருள்.

" அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சல் எனவேல்தோன்றும் நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகா என்(று) ஓதுவார் முன் "

மணியர் ஆலய மெனப் பாடி யிருக்கிறார். இந்தத் தலத்தில் ஒரே பீடத்தில் மூல விக்கிரமும், அதற்கிரு புறத்தில், இரு தேவி விக்கிரகங்களும், நின்ற திருக்கோலமாய் எழுந்தருளி யிருப்பதைக் கவனித்தால், இது சுப்பிரமணியத் தலங்களி லன்றி, மற்றெந்த விஷ்ணு க்ஷேத்திரங்களிலும் இராதென்று புலப்படும். இந்த ஆலயத்திலுள்ள ஸ்தம்பங்கள் உன்னத மாயும், ஒவ்வொரு ஸ்தம்பத்தில் விசேஷ விசித்திர வேலைப் பாடுள்ள உருவங்களும், சின்னங்களும் முன்னமே அமையப் பெற்றனவாயிருந்து, இப்போது ஸ்தம்பங்களிலும், தள வரிசை முதல் மேம்பட்ட வரையிலுள்ள உருவங்களில் ஒரு சின்னமாவது இன்னதென நிச்சயிக்கக் கூடாதபடி, உளி யினால் செதுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிரதேசங்களில் புற மதஸ்தர்களாகிய மகம்மதியர்களும் கிறிஸ்தவர்களும் விசேஷ சஞ்சாரம் செய்கிறவர்களில்லை யாதலால், அவர் களால் இக் காரியம் நேரிட்டதல்ல வென்பதைத் திடமாய்ச் சொல்லலாம்.

இந்தத் தலம் தற்போது வைஷ்ணவ ஸ்தலமாக “ திரு மாலிருஞ்சோலை ” எனப் பெயர் பெற்று விளங்கி வருகிறது. இந்த ஸ்தல மூர்த்தியை விஷ்ணு மூர்த்தியாகவே பாவித்து, திரு விழாக்கள் நடத்தி வருகிறார்கள். ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளுக்கு காவற் காரரும் படைத் தலைவரும் வீரவாகு தேவர் என்பது பிரசித்தம். அவரே இத்தலத்தைக் காத்து வருகின்றனர். இத் தலத்தின் முகத்துவாரத்தில் பதி னெட்டாம் படிக் கறுப்பண்ண சுவாமி கோயில் இருக் கின்றது. விஷ்ணு கோயிலுக்கும் கறுப்பண்ண சுவாமி கோயி

“ கார்த்திகேயவ புர்த்தராய நமஹ:
த்வைததோஷ நிவாரணாயநமஹ:
— ஸ்ரீ வெங்கடேச சகஸ்ர நாமம்.

னுக்கும் எந்தச் சமயத்திலும் எந்த நாளிலும் சம்பந்தமே கிடையாது. இந்தக் கோயிலில் வீற்றிருக்கும் விக்கிரகத்துக்கு "அழகர்" என்று பெயர் உண்டு. அழகர் என்கிற பெயர், ஸ்ரீ சுப்பிரமண்யக் கடவுளுக்கும்-சோமசுந்தரக் கடவுளுக்கும் உரித்தான பெயரே தவிர, விஷ்ணுவுக்கு உரித்தானதென்று, சொல்லப் பிரமாணம் ஒன்றுமில்லை. நாலாயிரப் பிரபந்தமாகிய வைஷ்ணவ சம்பிரதாயமான பழமையான ஏட்டுப்பிரதியில், திவ்வியதேசங்களின் பிரபாவங்களை விரித்துரைக்கின்ற இடத்தில், இந்தக்கோயிலின் விமானம் சோமசுந்தர விமான மென்றும், கிரியின் பெயர் "விருஷபகிரி" என்றும், சொல்லப்பட்டிருக்கிறது. இதற்குப் பிரமாணம்:—

"வினையற வந்திறைஞ்சுமெழின் மழ
விடையை நோக்கி
மனமகிழ்ந் தளிகளோடு மதிதவழ்
அயர்பினோடும்
இனிமையிற்கிடத்தி நாமமிடப
வெற்பென்னப் போந்த
தனுவொடுங்கிடந்த தோங்கத்தண்
டளை மலையதாகி."

என்று திருவிளையாடற் புராணம் 46-வது மதுரையான திருவிளையாடற் படலம் 27-வது பாட்டில், இது சிவ சம்பந்தமான கோயில் என்று அதன் சின்னங்கள் அமைந்துள்ளதாகக் காட்டுகிறது.

---

"பக்தல்சய: கார்த்திகேயே காகுல்த புவிமானவ
ஆயுஷ்மான் புத்ர பௌத்ரைஸ்ச
ஸ்கந்தஸா லோகபதாம் வ்ரஜேத்"
— ஸ்ரீவால்மீகி ராமாயணம் 37-வது ஸர்க்கம். 33-சுலோகம்.

" கோவலர் கோவிந்தனைக்
குறமாதர்கள் பண்குறிஞ்சிப்
பாவொலிபாடி நடம்பயில்
மாலிருஞ் சோலையதே."

" புனத்திணைக்கிள்ளிப்புதுவவிகாட்டி
புன்பொன்னடிவாழ்கவென்று
இனக்குறவர்புதியதுண்ணும்
எழில்மாலிருஞ்சோலை எந்தாய்."

— பெரியாழ்வார் திருமொழி.

இந்த வைஷ்ணவப் பெரியார் திருவாக்கின்படி 'மாலிருஞ் சோலை' என்னும் ஸ்தலமானது, குறிஞ்சிநிலமென்றும் அங்கு வசிக்கும் குறவர்கள் பாடியாடி நடம்பயில்கின்ற இடமென்றும் ஏற்படுகிறது. குறிஞ்சி நிலத்துக்குத்தெய்வம் முருகக்கடவுளென்பதும், அம் முருகக்கடவுளே தெய்வமென்றும், அத் தெய்வத்துக்கே குறவர்கள் படையல் போட்டுத் தொழுகிறது வழக்கமென்றும், அதுமாலிருஞ்சோலையிலுள்ள கடவுளுக்கே அமைத்துப் பெரியார்கள் பாடியிருப்பதால், இம்மாலிருஞ் சோலை (பழமுதிர்சோலை) சுப்பிரமணிய ஸ்தலமென்பதும், இக்கோயிலினுள்ள விக்கிரகம் ஸ்ரீவள்ளி தேவசேனாபதிசமேத சுப்பிரமண்யர் என்றும், நிதர்சனமாகின்றன. ஆனால்,

" கண்ணூராயிரமேற் கொடுகாண்பரிதாமெம்
மண்ணூருரையினுதித்த கண்ணூறிரண்டுடையோன்
விண்ணூருதகார் மேனியன்வீற்றிருப்பதுபூந்
தண்ணெனுவுமிழ் பழமுதிர்சோலையேவதண்டம்."

இற்றைக்குச் சுமார் 200-வருஷங்களுக்கு முன்னர், கவி பாலசுப்பிரமணியக் கவிராயர் பாடிய பாசுரத்தில், பன்

ணிருகரங்களையுடைய வேலாயுத மூர்த்தியும் ஸ்யாமாள ரூப மஹாவிஷ்ணுவும் இந்தப்பழமுதிர் சோலையில் எழுந்தருளி யிருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

" தாழ்சடையும் நீண்முடியும்
ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால். "

" திரண்டருவிபாயும் திருமலைமேலெந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து. "

" வெற்பென்றிருஞ்சோலை வேங்கட
மென்றிவ்விரண்டும் நிற்பென்று
நீமதிக்கும் நீர்மை போல். "

திவ்ய பிரபந்தத்தில் பூதத்தாழ்வார்பாடியருளிய இயற் பா திருவந்தாதியில் கூறியபடி, திருவேங்கடமும், பழமுதிர் சோலையும் (ஆறுபடைகளில் ஒன்று முருகக்கடவுளுக்குரி யது) தம்முடையதென்று கோவிந்தப்பெருமாளும் மதிக்கிறார் என்பதால், இவ்விரண்டு ஸ்தலங்களிலுமுள்ள மூல விக்கிர கம் இரண்டு சின்னங்களையும் பெற்றிருத்தல் வேண்டும். அவ் வாறு காணப் பெறினும், தற்போது இது வைஷ்ணவ ஸ்தல மாகவே, எல்லோராலும் கொண்டாடப்பெற்று வருகிறது. இத்தலம் குறவர்களால் பூசிக்கப்படும் காரணத்தாலேயே, இங் குள்ள மூர்த்திக்குக் 'கள்ளர் அழகர்' என்கிற பெயர் சூட் டப்பட்டிருக்கிறது போலும். "ஒருருவாயினை மானுங்காரத் திரியல்பாய்....................மும் மூர்த்திகளாயினை"

— திரு எழுகூற்றுக்கிருக்கை.

ஒரே வஸ்து வானது பிரம்ம - விஷ்ணு - உருத்திரர்க ளாக, தந்தம் தொழிலை நோக்கிக் கூறப்படுகின்றமையால்,

இத்தலம் வைஷ்ணவர்களால் விஷ்ணுமூர்த்தி யென்றும், சைவர்களால் குமாரக்கடவுள் என்றும் சொல்வது அதிசய மில்லை. நம்மாழ்வார் சுவாமிகளும், தான் வைகுந்தம் செல்ல முயன்றபோது, கோவிந்தமாமுநியே - நான் முகனே - முக்கண்ணப்பா என்று பாடி யிருக்கிறார். தவிர, அப்பெரியார் தம்முடைய திருவாய்மொழிப் பிரபந்தம் முடித்த காலத்தில்,

"திருப்பேர் நகரான் திருமாலிருஞ் சோலை
பொருப்பேயுறைகின்ற பிரானின்றுவந்து
இருப்பேனென்றென் னெஞ்சுநிறையப் புகுந்தான்
விருப்பே பெற்ற முதமுண்டு களித்தேனே."

என்றுபாடி யிருக்கின்றார். நக்கீரரும் திருமுருகாற்றுப்படையில் ஆறுவது படைவீடு 'பழமுதிர் சோலை' என்று பாடியுள்ளார். இவ்வகையான மாறுதல்கள் கால பேதத்தால் தோன்றுவதியற்கை என்பர் அறிவுடையார்.

"துய்ய தாமறைகளாலுந் துதித்திட வரியதான
செய்ய வேளடிகள் வாழ்க சேவலு மயிலும் வாழ்க
வெய்ய சூர்மார்பு கீண்ட வேற்படை வாழ்க வன்னான்
பொய்யில்சீரடியார் வாழ்க வாழ்க விப்புவனமெல்லாம்."

— ஸ்ரீசம்பந்த சரணாலய சுவாமிகள்.

☞ இவர் திரிசிரபுரம் மஹாவித்வான் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை, மாணுக்கர் அரன்வாயல்-தி. அ. வேங்கடசுப்பு பிள்ளை அவர்கள் சிஷ்யராயுள்ள,

[signature]

திருக்கழுக்குன்றம்.

வெகுதான்ய ஆண்டு வைகாசித்திங்கள் 1-ம் நன்னாள்.
விசாக நக்ஷத்திரம் (14—5—1938)

முருகன் துணை.

# திருமுருகாற்றுப்படை

இந்நூல் மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரரால் பாடப் பெற்றதாகும். குறவர் குல தெய்வமாகிய ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள் மீது பாடியது. தான் இருந்தது மதுரையாதலால், முதலில் திருப்பரங்குன்றத்தையும், பின்னர் திருச்சீரலைவாய் முதலிய க்ஷேத்திரங்களையும் பாடியதாகத் தெரிகிறது. மலைகளுக்கே சிறந்த தெய்வமாகியசுப்பிரமணியக் கடவுள் ஏனைய நான்கு இடங்களினும் மேம் படலானார். ஏரகம் (சுவாமிமலை) மருத நிலத்திலுள்ளது. ஆவினன்குடி (பழனி) முல்லை நிலத்திலுள்ளது. குன்றுதோறாடல் பாலைக்குச் சிறந்தது. சீரலைவாய் (திருச்செந்தூர்) நெய்தல் நிலத்திலுள்ளது. பழமுதிர்சோலை (கள்ளழகர் கோயில்) மலை அருவியையுடைய குறிஞ்சி நிலத்திலுள்ளது.

தக்ஷிண கலாநிதி டாக்டர்

## ஸ்ரீ. உ. வே. சாமிநாதய்யர் பத்துப் பாட்டு

முகவுரையில் எழுதியது:—

திருமுருகாற்றுப்படை:—இது 317 அடிகளையுடையது. வீடு பெறுதற்குச் சமைந்த ஓர் இரவலனை, வீடு பெற்றானொருவன், முருகக்கடவுளிடத்து ஆற்றுப்படுத்தியதாக, அம் முருகக்கடவுளை மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது. இப்பாட்டு முருகக் கடவுளுடைய திருப்பதிகட்குச் சிறந்த திருப்பரங்குன்றம் - திருச்சீரலைவாய் - திரு ஆவினன்குடி - திருவேரகம் - குன்றுதோறாடல் - பழமுதிர்

சோலை என்னும் ஆறுபடை வீட்டினும், அவர் எழுந்தருளி யிருத்தலைப் பாராட்டிக் கூறும். ஒரு மலைக்குகையில் முன்னமே அடைக்கப்பட்டிருந்த தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதிமரோடு சேர்த்துண்ணக் கருதித் தம்மையும் அக் குகையில் அடைத்துவிட்டு, உண்ணுதற்கு நீராடப் போன ஒரு கொடிய பூதத்தை வெல்லக் கருதித் தம்மையும் நக்கீரனார் முருகக் கடவுளைக் குறித்து, இத் திருமுருகாற்றுப்படையைப் பாடி, அப் பூதத்தினின்றும் விடுதலை பெற்றனர் என்பர். இவ்வரலாற்றின் விரிவு, சீகாளத்தி புராணத்துள்ள நக்கீரச் சருக்கத்தால் விளங்கும். நக்கீரனாரைச் சிறை மீட்டருளிய இந்த லீலை, ஒவ்வொரு வருடத்தும், திருப்பரங்குன்றத்தில் பங்குனி மாதத்து நடக்கும் உற்சவ காலத்து, நான்காம் திருநாளில் நடை பெற்று வருகிறது. முருகக் கடவுளுடைய திருவருளைப் பெற விரும்புவோர், இந்தத் திருமுருகாற்றுப்படையை நியமமாக அன்புடன் பாராயணம் பண்ணுதல் நலமென்று பெரியோர் கூறுவர்."

பண்டைக் காலத்தில் முருகப் பெருமானைச் செம்படவர்கள், வேல் நட்டு அல்லது சுறு மீன் கோட்டை நட்டுப் பலியும் மாலையும் மாலையும் சூட்டிப் பூவும் புரையுங்கொண்டு, கொம்பும் குழலும் ஒலிப்ப வழிபட்டிருத்தல் வேண்டும் என்றும், புராணங்கள் ஏற்பட்ட பிற்காலத்தில், வேல் நட்டேதான் வழிபட்டிருக்க வேண்டுமென்றும் ஆன்றோர் கூறுகின்றனர்.

"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை."

---

படைவீடு - படைவீரர் முகாம் செய்யும் இடம்; பாசறை.

# நள வெண்பா மூலமும் - அகல உரையும்.

"தினமணி" அபிப்ராயம்:—புகழேந்திப்புலவர் இயற்றிய "நள வெண்பா" மூலமும்; தமிழ்வாணர்-மதுரகவி ஸ்ரீ. ம. மாணிக்கவாசகம் பிள்ளை எழுதிய விரிவுரையும் கொண்ட இந்த நூல் 512-பக்கங்களைக் கொண்டதாகும்.

கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டது விலை ரூபா. 2-0-0.

"நளவெண்பாவிற்கு இதுவரையிலும் பல உரைகளும், விருத்தியுரைகளும் பலரால் எழுதப்பட்டிருக்கின்றன. ஆனால், ஸ்ரீ. மாணிக்கவாசகம் பிள்ளையால் எழுதப்பட்ட இந்த உரையும் அகலவுரையும்மிகவும்சிறப்புவாய்ந்தவனவாக இருக்கின்றன. முக்கியமாக படிப்போர்களை பயமுறுத்தும், "கடமுடாக் கன்ருவித் தமிழில்" உரை இல்லாது, இனிய தமிழில், அழகிய நடையில் இவர் உரை அமைந்திருப்பது புகழத் தக்கதே யாகும்.

மாதிரிக்கு சில உரைகளை மட்டும் - (மூலத்தை நீக்கி) கீழே தருகிறேன்:—தமயந்தியின் இடுப்பானது உயர்ந்து வளரும் இளமுலைகளை, அவள் ஆயுள் நாள் முழுவதும் தாங்கி நிற்கும் வலியுடையதாக தென்றும், அவளது பாதச் சிலம்புகள், புதுத்தேன் ததும்பும் (மலர் சூடிய) கூந்தலை யுடையாளாகிய அவளது இரு பாதங்களிலும் விழுந்து (அவைகளுக்கு) அணியாகி வாய் திறந்து ஒளிக்கும்.

"வேடன் தன்னேடு வாவென் றழைத்ததனுல்; (தமயந்தி) கண்கள் துடித்த, தச்சூடெழ மூச்செறிந்து, ஆடு மயில் போல் சுழன்று, வேலாயுதம் போன்ற கண்களில் நீர், வழியெல்லாம் ஒழுகும்படி அழுது கொண்டே, சுழிந்த கூந்தல் புதர்களிலெல்லாம் சிக்கிக்கொள்ளும்படி ஓடினுள்"

நூல் முழுவதும் உரை இத்தகைய நயத்துடனேயே ஓடுகிறது. நளவெண்பா நடைத்தைக் காட்டிலும் அழகுடையதாகும்.

இதை, தமிழின் நயத்தை அறிந்துகொள்ள விரும்பும் அனைவரும் வாங்கிப் படிக்க வேண்டியது அவசியம். சிறப்பாக, "நள வெண்பா" பாடம் பயிலுபவர்களுக்கு, இப்புத்தகம் பெரிதும் உதவியளிக்கு மென்பதில் சந்தேகமே கிடையாது"

உ

முருகன் துணை.

# திருமுருகாற்றுப்படை

[ஆசிரியர் ஸ்ரீ. கோ. வடிவேலு செட்டியார் அவர்கள்
எழுதிய உரையும்.]

## காப்பு

ஒருமுரு காவேன்றேன் னுள்ளங் குளிர வுவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம் பாநிற்பத் தையன்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே.

(ப-ரை) தையல் = ஒரு செட்டிப் பெண்
ஒரு முருகா என்று = ஒப்பற்ற முருகப் பிரானே யென்று (நான் சொல்ல)
என் உள்ளம் குளிர = எனது மனம் குளிர்ச்சி யடையுமாறு
உவந்து = விரும்பி
உடனே = (சொன்ன) உடனே
வரும் முருகா என்று = (என்முன்) வருகின்றமுருகப் பிரானே என்று கூறி
வாய் வெருவா நிற்ப = வாய் குளறி நின்று
இங்ஙனே = இப்போதே
முருகா = முருகனே (நீ)
கை தருவென்று = (யானிழந்த) கரத்தை எனக்குத் தரக்கடவா யென்று அழா நிற்க
முன்னே = (அப்போது அப்பெண்) முன்னே
திருமுருகாற்றுப் படையுடனே வரும் சேவகனே = திருமுருகாற்றுப்படை என்னுந் திவ்வியப்பிரபந்தத்துடனேஎழுந்தருளிய வீரனே! (நீ எனக்கும் கருணை செய்தல் வேண்டும்.)

உ

கணபதி துணை



வேலுமயிலுந் துணை

# திருமுருகாற்றுப்படை மூலமும், பரிமேலழகர் உரையும்.

———:o:———

முதலாவது

## திருப்பரங்குன்றம்

——✧——

இணைக்குறள் ஆசிரியப்பா

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோள் முகந்த கமஞ்சூன் மாமழை

வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்
திருள்படப் பொதுளிய பராரை மராஅத்

துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்

பல்காசு * நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்

செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்

துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிண ரட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்
பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக

* 'நிறைத்த' என்றும் பாடம்.

வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்

வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய * வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்

சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா † மரம்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்

சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்
உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்

டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை

---

* 'வேன்ற விறல்' என்றும் பாடம்.

† 'மரன்பயி' என்றும் பாடம்.

யொண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
* வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாய டுணங்கை தூங்க
விருபே ருருவி னொருபே ரியாக்கை
யறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
யவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் † புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுட
னன்னர் நெஞ்சத் ‡ தின்னசை வாய்ப்ப
வின்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்த லூதி யெற்படக்
கண்போன் மலர்ந்த காமர் சுனைமல
ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலு முரிய னதாஅன்று.

* வேன்றடு என்றும் பாடம்.
† 'புலம்பிரிந் துறையும்' என்றும் பாடவும்.
‡ 'தின்னிசை' என்றும் பாடம்.

## இதன் பொருள்

" உலக முவப்ப-மலைகிழ வோனே"

என முதலையு முடிவையுஞ் சொல்ல ஒருமை பெற்ற வுள்ளத்துடனே யொருகாற் பாடமோதிய தெனக்கொள்க.

"உலகம் உவப்ப" என்பது முதல் "கணவன்" என்பது வரையும் ஒரு தொடர்.

(க-ரு வரிகள்)

'உலகம் உவப்ப'

(க-வது வரி)

(பதவுரை) உலகமென்ப துயர்ந்தோர்மாட் டாதலாலும், உயர்ந்தோராயுள்ள பரம விருடிகளாயுள்ளோர் விரும்ப,

(விசேஷ-வுரை) உயர்ந்தோர் விரும்ப எனினு மமையும்,

'வலன் ஏர்பு திரிதரு'

(க-வது வரி)

(ப-ரை) வலமாகத் திரிந்தருளுகின்ற,

(வி-ரை) ஒன்றைக் குறித்து வலம் வரவேண்டுதலால் அது மகாமேரு வெனக்கொள்க. இதுவன்றி, "வெற்றியா லெழுந்து திரிதருகின்ற" தென்பாரு முளர்; அது பொருந் தாமை யறிக. அஃதெங்ஙன மெனின், இம்மகமேரு பூமிக்கு நடுவாதலாலும், இதனுச்சியிற் பரமேச்சுர னெழுந்தருளி யிருத்தலானு மெனக்கொள்க. இஃதன்றிப் பூமியை வல மாக வெனினுமமையும்,

'பலர் புகழ் ஞாயிறு கடல் கண்டு ஆங்கு'

(உ-வது வரி)

(ப-ரை) பலர் = எல்லாச் சமயத்தாராலும்
புகழ் = கொண்டாடப்பட்ட
ஞாயிறு = ஆதித்தனை
கடல் = கடலில்
கண்டு ஆங்கு = கண்டாற்போல,

(வி-ரை) என்றதனால் உவமை ஆதித்த னுதிக்கின்ற பொழுதிற் செம்மையும், கடலிற் பசுமையும், பிள்ளையார் திருமேனியினையும் மயில் நிறத்தினையும் காட்டிற்று எனக் கொள்க,

'ஓ அற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி'

(ந-வது வரி)

(ப-ரை) ஓ அற = ஒழிவற
இமைக்கும் = விட்டு விளங்கும்
சேண் = தூரம்
விளங்குதல் = தோற்றம்
அவிர் = பாடஞ்செய்தல்
ஒளி = நிறம்

(வி-ரை) ஆகவே, அதிதூரத்திலே தோன்றி ஒளி விட்டு விளங்கிப் பாடஞ்செய்கின்ற திருநிறத்தினையுடை யனுமாய் எனக் கூட்டுக. இதுவன்றி, "இமைத்தல்-நிறைதல் விட்டு விளங்கும்" என்பாருமுளர்,

'உறுநர் தாங்கிய மதன் உடை நோன்தாள்'

(௪-வது வரி)

(ப-ரை) உறுநர் = மெய்யடியார்
தாங்குதல் = காத்தல்
மதன் உடை = அழகுடைய
நோன் தாள் = வலிய தாளாகிய ஸ்ரீபாதம்,

(வி-ரை) எனவே, மெய்யடியாரைக் காக்கின்ற வலியினையுடைத்தான ஸ்ரீபாதத்தை யுடையனுமாய்,

'செறுநர் தேய்த்த செல் உறழ் தடக்கை'

(௫-வது வரி)

(ப-ரை) செறுநர் = சத்துருக்கள்
தேய்த்த = கெடுத்த
செல் = மேகம்
உறழ்தல் = ஒத்தல்
தடக்கை = பெரிய கை,

(வி-ரை) எனவே, சத்துருக்களைக் கெடுத்து மேகத்தினது செய்தியை யுடையவாய பெரிய கைகளை யுடையனுமாய்,

'மறு இல் கற்பின் வாள் நுதல் கணவன்'

(௬-வது வரி)

(ப-ரை) மறு இல் = குற்றம் இல்லாத
கற்பின் = பதிவிரதாபாவத்தினையுடைய
வாள் = ஒளி
நுதல் = நெற்றி
கணவன் = கொழுநன்,

(வி-ரை) எனவே, குற்ற மில்லாத பதிவிரதா பாவத் தினையும், ஒளிதரு நெற்றியினையுமுடைய தெய்வயானைக்குக் கொழுநனுமாய்,

'கார்கோள்' என்பது முதல் 'மார்பினன்'
என்பது வரையும் ஒரு தொடர்.
(எ-வது வரிகள்)

'கார் கோள் முகந்த கமம் சூல் மா மழை'
(எ-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) கார் கோள் | = | கறுத்த மேகமானது |
| முகத்தல் | = | முகத்தல் [ஆதலால் 'கார் கோள்' என்று கடலுக்கு பெயராயிற்று.] |
| கமம் | = | முதிர்ச்சி |
| சூல் | = | கரு |
| மா மழை | = | பெரிய மழை, |

(வி-ரை) எனவே, கடலில் முகந்து முதிர்ந்த கருக் கொண்ட மேகங்களானவை பெரிய மழைகளை,

'வாள் போழ் விசும்பின் வள் உறை சிதறி
(அ-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) வாள் | = | ஒளி |
| போழ்தல் | = | கூறிடுதல் |
| விசும்பின் | = | ஆகாயத்தில் |
| வள் உறை | = | வளப்பத்தையுடைய துளிகளை |
| சிதறி | = | தூவி, |

(வி-ரை) எனவே, சந்திராதித்தர்களாலே பளவிடப் பட்டாற்போன்ற விசும்பினிடத்தில் நின்று மேகமானது வளப்பமுடைய பெரிய மழைகளைத் தூவி,

'தலைப் பெயல் தலைஇய தண் நறுங் கானத்து'

(௯-வது வரி)

(ப-ரை) தலைப்பெயல் = முதற்பெய்த மழை
தலைஇய = பெய்த
தண் = குளிர்ச்சியையும்
நறுங்கானத்து = நறுநாற்றத்தினையு முடைய காட்டிடத்து,

(வி-ரை) எனவே, முதற் பெய்த நீர் நிலத்துக் குளிர்ந்த நறுநாற்றத்தினையுடைய பொழிலிடத்து. இதுவன்றி, 'தலைஇய' எனற்குத் 'தழைத்த' எனினு மமையும்,

'இருள் படப் பொதுளிய பராரை மராஅத்து'

(௧௦-வது வரி)

(ப-ரை) இருள் பட = இருளுண்டாக
பொதுளிய = நெருங்கிய
பராரை = பருத்த அரை
மராஅத்து = கடம்பு,

(வி-ரை) எனவே, இருளுண்டாக நெருங்கிப் பருத்த அரையினையுடைய மரமாகிய கடம்பின்,

'உருள் பூ தண் தார் புரளும் மார்பினன்'

(௧௧-வது வரி)

(ப-ரை) உருள் பூ = தேருருள் போன்ற வட்டப்பூ
தண் தார் = தட்பமுடைத்தாய திருமாலை
புரளும் = அசைதருகின்ற
மார்பினன் = மார்பினையுடையவன்,

(வி-ரை) எனவே, வட்டப்பூவாற் சமைந்து தட்பமுடைத்தாய திருமாலை யசைதருகின்ற மார்பினையுடையனுமாய்,

'மால்வரை' என்பது முதல் 'சென்னியன்' என்பது வரையும் ஒரு தொடர்.

(கஉ-சச வரிகள்)

'மால் வரை நிவந்த சேண் உயர் வெற்பில்'

(கஉ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | மால் | = | பெருமை |
| | வரை | = | கழை |
| | நிவந்த | = | பரந்த |
| | சேண் உயர் | = | ஆகாசத்தி லோங்கிய |
| | வெற்பில் | = | வரையிடத்து, |

(வி-ரை) எனவே, பெரியகழைகளினாலே பரக்கப் பட்டு ஆகாயத்திலோங்கிய மலையிடத்து,

'கிங்கிணி கவைஇய ஒள் செம் சிறு அடி'

(கரு-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | கிண்கிணி | = | சிறு சதங்கை |
| | கவைஇய | = | கட்டின |
| | ஒளி | = | அழகு |
| | செம் | = | சிறப்பு |
| | சிறு அடி | = | சிறுத்தவடி, |

(வி-ரை) எனவே, சிறுசதங்கைகளாலே கட்டப்பட்டு அழகினையும் சிறப்பினையு முடைத்தாய சிறிய வடியினையு முடையராய்,

'கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணை தோள்'

(கசு-வது வரி)

(ப-ரை) கணைக்கால் கணைக்கால்

பரிமேலழகர் உரையும்.

வாங்கிய = சுருங்கிய
நுசுப்பின் = இடையையும்
பணை = வேய்போன்ற
தோள் = தோளினையு முடையவராய்

'கோபத்து அன்ன தோயா பூந்துகில்'
(கரு-வது வரி)

(ப-ரை) கோபத்து அன்ன = இந்திரகோபம் போன்ற
தோயா பூந்துகில் = தற்சுபாவமான தானையும்,

'பல் காசு நிரைத்த சில் காழ் அல்குல்'
(கசு-வது வரி)

(ப-ரை) பல் காசு = பல மணி
நிரைத்த = நிரைக்கப்பட்ட
சில்காழ் = மேகலை
அல்குல் = நிதம்பம்

(வி-ரை) எனவே, பல மணி நிரைக்கப்பட்ட சிற்பத் தொழிலமைந்த மேகலை புனைந்த நிதம்பத்தையும் உடையராய், இதற்கு, 'பல் காசு நிரைந்த சில்காழ் அல்குல்' எனப் பாடங்கொண்டு, 'பல மணிகள் நிறைக்கப்பட்டு மாறுபடச் சேர்த்த சிற்பத்தொழில் பொருந்திய அரைப்பட்டிகையு மமர்ந்த அரையினையு முடையராய்' என்பாருமுளர்,

'கைபுனைந்து இயற்ரு கவின் பெறு வனப்பின்'
(கஎ-வது வரி)

(ப-ரை) கைபுனைந்து இயற்ரு = கையா லியற்ற முடியாத

திருமுருகாற்றுப்படை மூலமும்,

| | | |
|---|---|---|
| கவின் | = | அழகு |
| பெறு | = | பெற்ற |
| வனப்பு | = | இளமை நிறம், |

(வி-ரை) எனவே, கையா லியற்ற முடியாத அழகு பெற்று இளமை நிறத்தினையு முடையராய்,

'நாவலோடு பெயரிய பொலம்புனை அவிர் இழை'

(கஅ-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) நாவலொடு பெயரிய | = | நாவற்பழத்து சாறு பட்டுப் பேதமான |
| பொலம்புனை அவிர் இழை | = | பொன்னாற் செய்யப் பட்ட விளக்கமான ஆபரணங்களையு முடையவராய், |

'சேண் இகழ்ந்து விளங்கும் செயிர் தீர் மேனி'

(கசு-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) சேண் | = | தூரம் |
| இகத்தல் | = | கடத்தல் |
| விளங்கும் | = | விட்டு விளங்கும் |
| செயிர் | = | குற்றம் |
| தீர் | = | தீர்ந்த |
| மேனி | = | உடம்பு, |

(வி-ரை) அதி தூரத்தைக் கடந்து விட்டு விளங்கிக் குற்றந்தீர்ந்த உடம்பினையு முடையராய்,

'துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதி
செம் கால் வெட்சி சிறு இதழ் இடை இடுபு'

(உ௦, உக-வது வரிகள்)

(ப-ரை) துணையோர் = ஆயத்தார்
ஆய்ந்த = வகிர்ந்து திருத்தின
துணை = கூட்டம்
ஈரம் = குளிர்ச்சி
ஓதி = மயிர்
செம் கால் = சிவந்த தாளினையுடைய
வெட்சி = வெட்சியின்
சிறு இதழ் = சிறிய இதழ்களை
இடை இடுபு = இடையிட்டு,

(வி-ரை) எனவே, ஆயத்தார் வகிர்ந்து திருத்தின கூட்டமுங் குளிர்ச்சியுமுடைய மயிரிலே வெட்சியின் சிறிய இதழ்களை யிடையிட்டு,

'பைந்தாள் குவளை தூ இதழ் கிள்ளி'

(உஉ-வது வரி)

(ப-ரை) பைந்தாள் = பச்சென்ற தாளினையுடைய
குவளை = நீலோற்பலத்தினது
தூ இதழ் = தூய இதழ்களையும்
கிள்ளி = கிள்ளியிட்டு

'தெய்வ உத்தியோடு வலம்புரி வயின் வைத்து'

(உ௩-வது வரி)

(ப-ரை) தெய்வ உத்தியோடு ... சீதேவி யென்னும் தலைக்கோலத்துடனே,

'இணைப்புறு பிணையல் வளைஇ'

(௩0-வது வரி)

(ப-ரை) இணைப்புறு = இணைக்கப்பட்ட
பிணையல் = மாலை
வளைஇ = கொண்டையிலே வளையச் சுற்றி,

'துணைத்தக,
வள் காது நிறைந்த பிண்டி ஒள்தளிர்
நுண் பூண் ஆகம் திளைப்ப'

(௩0-௩௨ வரிகள்)

(ப-ரை) துணைத்தக = ஒத்த
வள் காது = அழகிய காது
நிறைந்த = நிரம்பின
பிண்டி = அசோகு
ஒள் தளிர் = ஒள்ளிய தளிர்
நுண் = நுண்ணிய தொழில் புனைந்த
பூண் = அணி
ஆகம் = மார்பிலே
திளைப்ப = கிடந்தசைதர,

(வி-ரை) எனவே, ஒத்த வழகிய காது நிரம்பின அசோகின தழகிய தளிரானது நுண்ணிய தொழில் புனைந்த அணிகள் மார்பிலே கிடந் தசைதர,

'திண் காழ்,
நறும் குறடு உரிஞ்சிய பூங்கேழ் தேய்வை'

(௩௨-௩௩ வரிகள்)

(ப-ரை) திண் = செறிந்த
காழ் = வயிரம்

'துவர முடித்த துகள் அறும் உச்சி
பெரும்தண் சண்பகம் செரீஇ'
(உகூ, உஎ-வது வரிகள்)

(ப-ரை) துவர முடித்த = பெருகமுடித்து
துகள் அறும் உச்சி = சிம்பறக் கோதி,
பெரும் தண் = பெருத்துக் குளிர்ந்த
சண்பகம் = சண்பகப்பூவை
செரீஇ = செருகி,

'கரும் தகட்டு
உளைப்பூ மருதின் ஒள் இணர் அட்டி'

(உஎ, உஅ வரிகள்)

(ப-ரை) கரும் தகட்டு = கரிய புறவிதழ்
உளைப் பூ = விரித்த பூ
மருதின் ஒள் இணர் = மருதி னழகிய பூங்கொத்து
அட்டி = அப்பி,

(வி-ரை) எனவே, கரிய புறவிதழ் விரிந்த மருதி னழகிய பூங்கொத்துகளைப் பரப்பி,

'கிளை கவின்று எழுதரு கீழ் நீர் செவ்வரும்பு'
(உகூ-வது வரி)

(ப-ரை) கிளை = கிளையை
கவின்று = நெருங்கி
எழுதரு = எழுகின்ற
கீழ் நீர் = நீர்க்கீழ் நிற்கும்
செவ்வரும்பு = சிவந்து அரும்பாகிய பூவினாலே,

வலம்புரி = நந்தியாவட்டம்
வயின் வைத்து = இடையிடையே செருகி,
(இதுவன்றி)
வலம்புரி = சங்கின்ற முத்து
வயின் = இடம்
தெய்வ உத்தியோடு
வைத்து = அணிந்து

(வி-ரை) எனவே, சிதேவி என்னும் தலைக்கோலத்துடனே சங்கின்ற முத்தின் மாலையும் அவ்விடத்தணிந்து,

'திலகம் தைஇய தேம் கமழ் திருநுதல்
மகரம் பகு வாய் தாழ மண்ணுறுத்து'

(உச, உரு-வது வரிகள்)

(ப-ரை) திலகம் = பொட்டு
தைஇய = ஊன்றின
தேம் கமழ் = நறுநாற்றம் கமழ்தல்
திரு நுதல் = சிறந்த நெற்றியிலே
மகரம் = சுறவு
பகு வாய் = பெரிய வாய்
தாழ = சரிய
மண்ணுறுத்து = விளக்குறுத்தி,

(வி-ரை) எனவே, பொட்டூன்றி நறுநாற்றங் கமழ்வதான நெற்றியையும் சுறவின் பெரிய வாய்போற் சரிய விளக்குறுத்தி; இதுவன்றி, "சுறவின் பகுவாய் தாழும்படி தழுவி முறுக்கிவைத் தழகுபெற முடித்த" தென்பாருமுளர்.

| | | |
|---|---|---|
| நறும் | = | நறுநாற்றத்தையுடைய |
| குறடு | = | சந்தனக்குறடு |
| உரிஞ்சிய | = | தேய்த்த |
| பூங்கேழ் | = | பொலிவினை யுடைத்தாய |
| தேய்வை | = | குழம்பு, |

(வி-ரை) எனவே, செறிந்த வயிரம் பொருந்திய நறு நாற்றத்தையுடைய சந்தனக் குறடு தேய்த்த குழம்பு,

'தேம் கமழ் மருது இணர் கடுப்ப கோங்கின்
குவி முகிழ் இள முலை கொட்டி'

(௩௪-௩௫ வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | தேம் கமழ் | = | மணங் கமழ்கின்ற |
| | மருது இணர் | = | மருதப் பூங்கொத்தை |
| | கடுப்ப | = | ஒத்த சந்தனக்குழம்பை |
| | கோங்கின் | = | கோங்கினது |
| | குவி | = | அரும்பிய |
| | முகிழ் | = | மொட்டுப்போன்ற |
| | இள முலை | = | இளமுலைகளிலே |
| | கொட்டி | = | அப்பி, |

விரிமலர், வேங்கை நுண் தாதுஅப்பி'

(௩௫-௩௬ வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | விரி | = | அதன்மேலே விரிந்த |
| | வேங்கை மலர் | = | வேங்கைப் பூவின் |
| | நுண் தாது | = | நுண்ணிய தாதுகளை |
| | அப்பி | = | அப்பி, |

'காண்வர, வெள்ளில் குறு முறி கிள்ளுபு தெறியா'

(ருசு-ருஎ வரிகள்)

(ப-ரை) காண் வர = காட்சி பெற
வெள்ளில் = விளா
குறு முறி = சிறு தளிர்
கிள்ளுபு = கிள்ளி நறுக்கி
தெறியா = தெறித்து,

(வி-ரை) எனவே, காட்சி பெற விளவினது சிறிய தளிரை யாய்ந்து நறுக்கித் தெறித்து, பிள்ளையார் சீபாதங் களை யுள்ளித் தெறித்து,

'கோழி ஓங்கிய வென்று அடு விறல் கொடி
வாழிய பெரிது என்று ஏத்தி'

(ருஅ-ருசு வரிகள்)

(ப-ரை) கோழி = கோழி
ஓங்கிய = எழுந்துயர்ந்த
வென்று அடு = வெற்றி மிகுந்த
விறல் = வீரம்
கொடி = துவசம்
பெரிது வாழிய = நெடுங்காலம் வாழ்வதாக
என்று ஏத்தி = என்று வாழ்த்தி,

'பலவுடன்,
சீர் திகழ் சிலம்பகம் சிலம்பப்பாடி'

(ருசு-சுO வரிகள்)

(ப-ரை) பலவுடன் = பல தோத்திரங்களினாலே
சீர் திகழ் = அழகுபட்டு விளங்க

சிலம்பகம் = மலையிடம்
சிலம்பப்பாடி = சத்திக்கப் பாடி,

(வி-ரை) எனவே, பலதோத்திரங்களினாலே அழகு பட்டு விளங்கிய மலையிடம் ஆரவாரிக்கப் பாடி,

'சூர் அரமகளிர் ஆடுஞ் சோலை'

(சக-வது வரி)

(ப-ரை) சூர் அரமகளிர் = தெய்வமடவாராயுள்ளார்
ஆடும் = கூத்தாடுகின்ற
சோலை = சோலை,

'மந்தியும் அறியா மரம் பயில் அடுக்கத்து'

(சஉ-வது வரி)

(ப-ரை) மந்தியும் = அருக்கனும்
அறியா = அறியாத
மரம் = மரங்கள்
பயில் = நெருங்கிய
அடுக்கத்து = சில மலையிடத்து,

(வி-ரை) 'மந்தியும் அறியா' என்பதற்குக் 'குறங்கு களு மறியாத' என்பாரு முளர்,

'சுரும்பு மூசா சுடர் பூ காந்தள்'

(சங-வது வரி)

(ப-ரை) சுரும்பு = வண்டு
மூசா = மொய்யா
சுடர் பூ = சிவந்த பூ
காந்தள் = காந்தளின்,

(வி-ரை) எனவே, வண்டு மொய்யாத சிவந்த காந்தற் பூவாற் றொடுத்த,

'பெரும் தண் கண்ணி மிலைந்த சென்னியன்'

(சச-வது வரி)

(ப-ரை) பெரும் = மிகவும்
தண் கண்ணி = குளிர்ந்த மாலை
மலைந்த = சூடின
சென்னியன் = திருமுடியை யுடையனுமாய்,

"பார் முதிர்" என்பது முதல் 'சேஎய்' என்பது வரையில் ஒரு தொடர்.

(சரு-சுக-வரிகள்)

'பார் முதிர் பனி கடல் கலங்க உள்புக்கு'

(சரு-வது வரி)

(ப-ரை) பார் = பூமி
முதிர் = சூழ்ந்த
பனி = குளிர்ச்சிபொருந்திய
கடல் = சமுத்திரம்
கலங்க = கலங்கும்படி
உள் புக்கு = உள் புகுந்து,

'சூர் முதல் தடிந்த சுடர் இலை நெடு வேல்'

(சசு-வது வரி)

(ப-ரை) சூர் = சூரபன்மாவை
முதல் தடிந்த = முதலுடனே கெடுத்த

சுடர் இலை = ஒளிபொருந்தி யகன்ற
நெடு வேல் = பெரிய வேலானது,

'உலறிய கதுப்பின் பிறழ் பல் பேழ் வாய்
சுழல் விழி பசுங்கண் சூர்த்த நோக்கின்'
(சஎ-சஅ வரிகள்)

(ப-ரை) உலறிய = காய்ந்த
கதுப்பு = மயிர்
பிறழ் = தோன்றிய
பல் = எயிறு
பேழ் வாய் = பெரிய வாய்
சுழல் விழி = சுழன்ற விழி
பசுங் கண் = பச்சென்ற கண்
சூர்த்தம் = நடுக்கம்
நோக்கம் = பார்வை,

(வி-ரை) காய்ந்த மயிரினையும், தோன்றிய வெயிற்றினையும், பெரிய வாயினையும், சுழன்ற விழியினையும், பச்சென்ற கண்ணினையும், நடுங்கிய பார்வையினையு முடைத்தாய்,

'கழல் கண் கூகையோடு கடும் பாம்பு தூங்க'
(சகூ-வது வரி)

(ப-ரை) கழல் கண் = கழன்று விழுவது போலுங் கண்
கூகையொடு = பேராந்தையுடனே
கடும் பாம்பு = கோபத்தையுடைய பாம்பு
தூங்க = தால,

(வி-ரை) எனவே, கழன்று விழுவதுபோலும் கண்ணையுடைய பேராந்தையுடனே விடத்தாற் கோபத்தையுடைய பாம்பையும் நால,

'பெருமுலை அலைக்கும் காதில்'

(ருO-வது வரி)

(ப-ரை) பெரு முலை = மிகநான்ற முலைகளிலே
அலைக்கும் = சென்றலைக்கின்ற
காதில் = காதிலே தூக்கிக்கொண்டு,

பிணர் மோட்டு, உரு கெழு செலவின்'

(ருO-ருக-வது வரிகள்)

(ப-ரை) பிணர் = சர்ச்சரை
மோட்டு = உயர்ச்சி
உரு கெழு = இருளுருப் பொருந்திய
செலவின் = நடக்கையிலே,

'அஞ்சு வரு பேய் மகள்'

(ருக-வது வரி)

(ப ரை) அஞ்சு வரு = அச்சந் தரும்
பேய் மகள் = பெண் பேய்

(வி-ரை) இதுவன்றியும், 'பனையினுயரம் போன்று கெழுமிய வடிவும் அஞ்சத்தக்க பெண் பேய்' என்பாருமுளர்.

'குருதி ஆடிய கூர் உகிர் கோடு விரல்'

(ருஉ-வது வரி)

(ப-ரை) குருதி = இரத்தம்

ஆடிய = தோய்ந்த
கூர் உகிர் = கூர்த்தவுகிர்
கொடு விரல் = வளைந்த விரல்

(வி-ரை) எனவே, உதிரந் தோய்ந்த கூர்த்த நகம் பொருந்திய வளைந்த விரல்கொண்டு,

'கண் தொட்டு உண்ட கழி முடை கருந்தலை
ஒள் தொடி தடம் கையின் ஏந்தி'

(௫௩-௫௪-வரிகள்)

(ப-ரை) கண் தொட்டு = கண்களைத்தோண்டி
உண்ட = உண்ணப்பட்ட
கழி = பொல்லாத
முடை = நாற்றத்தையுடைய
கருந்தலை = பசுந்தலையை
ஒள் = அழகிய
தொடி = வளை பொருந்திய
தடம் கை = பெரிய கையிலே
ஏந்தி = ஏந்திக்கொண்டு,

'வெருவர
'வென்று அடு விறல் களம் பாடி'

(௫௪-௫௫-வரிகள்)

(ப-ரை) வெருவர = கண்டவர்கள் பயப்பட
வென்று = வென்று
அடு = கொன்ற
விறல் களம் = வெற்றிக் களத்தை
பாடி = புகழ்ந்து,

'தோள் பெயரா,
'நிணம் தின் வாயள் துணங்கை தூங்க'

(ருரு-ருசு வது வரிகள்)

(ப-ரை) தோள் = தோளை
பெயரா = அசைத்து
நிணம் = நிணத்தை
தின் = தின்கின்ற
வாயள் = வாயுடனே
துணங்கை = சிங்கிக்கூத்தை
தூங்க = ஆடிக்கொண்டு,

(வி-ரை) எனவே, நிணந் தின்கின்ற வாயுடனே தோளை யசைத்துச் சிங்கிக் கூத்தையு மாடிக்கொண்டு,

இரு பேர் உருவின் ஒரு பேர் யாக்கை
அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி'

(ருஎ-ருஅ-வரிகள்)

(ப-ரை) இரு பேர் = சூரனென்றும் பதுமனென்றும் இரண்டு பேரையுடைய
உருவின் = வடிவமாய்
ஒரு பேர் = ஒரு பெரிய
யாக்கை = உடம்புடைய
அறு வேறு வகையின் = அவனது மூலப்படை, கூலிப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை, நாட்டுப்படை, என்றுசொல்லப்பட்ட அறுவகைப்படையும்,

அஞ்சுவர = அஞ்சும்படி
மண்டி = மேற்சென்று,

'அவுணர் நல் வலம் அடங்க கவிழ் இணர்
மாமுதல் தடிந்த'

(ருக-சுO வது வரிகள்)

(ப-ரை) அவுணர் = அசுரனது
நல் வலம் = சிறந்த வெற்றி
அடங்க = மடிய
கவிழ் = மாயையிலே
இணர் = கீழ் நோக்கிப் பூத்த
மா = மாவாய் நிற்கும் சூரபன்மனை
முதல் = முதலோடே
தடிந்த = தடிந்த

'மறு இல் கோற்றத்து,
எய்யா நல் இசை செவ்வேல் சேஎய்'

(சுO-சுக வது வரிகள்)

(ப-ரை) மறு இல் = குற்ற மில்லாத
கொற்றத்து = வெற்றியினை
எய்யா = இளையாத
நல் = நல்ல
இசை = கீர்த்தி பொருந்திய
செவ்வேல் = சிவந்த வேலையுடைய
சேய் = சுப்பிரமணியனே,

'சேவடி' என்பதுமுதல் 'வினையே' என்பது வரையில்
ஒரு தொடர்

(கூஉ-சுசு-வரிகள்)

'சேவடி படரும் செம்மல் உள்ள மோடு'
(சுஉ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | சேவடி | = | சிவந்த பாதம் |
| | படரும் | = | செல்லும் |
| | செம்மல் | = | பெருமை பெற்ற |
| | உள்ளமொடு | = | உள்ளத்தோடே, |

(வி-ரை) எனவே, சிவந்த பாதத்தைத் தேடிச் செல்லும் பெருமை பெற்ற உள்ளத்தோடே,

'நலம் புரி கொள்கை புலம் பிரிந்து உறையும்
சேலவு நீ நயந்தனை ஆயின்'

(சுங-சுசு-வது வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நலம் புரி | = | நன்மை மிக்க |
| | கொள்கை | = | கோட்பாடு |
| | புலம் | = | தேசம் |
| | பிரிந்து | = | விட்டு |
| | உறையும் | = | தங்கும், (எனவே தங்கும் அத்தேசம் விட்டு) |
| | செலவு | = | போக்கை [புலவனே] |
| | நீ நயந்தனை ஆயின் | = | நீ விரும்பினையாயின், |

'பலவுடன்,

நன்னர் நெஞ்சத்து இன் நசை வாய்ப்ப

இன்னே பெறுதி நீ முன்னிய வினையே'

(௬௪-௬௬ வது வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | பலவுடன் | = | பல பரிசிலாளருடனே |
| | நன்னர் நெஞ்சத்து | = | நல்ல நெஞ்சத்தோடே |
| | இன் நசை | = | இனிய வாசை |
| | வாய்ப்ப | = | பாடுபெற |
| | இன்னே | = | இப்படியே |
| | பெறுதி நீ | = | பெறுவை நீ |
| | முன்னிய | = | நீ நினைந்த |
| | வினையே | = | கோட்பாடுகளே |

(வி-ரை) எனவே, பரிசிலாளருடனே நல்ல நெஞ்சத்தோடே இனியவாசை பாடுபெற இப்படியே பெறுவை நீ நினைந்த கோட்பாடுகள்,

இது பரிசில் பெற்று வழியிலே திரிபட்டு வருகின்ற புலவன் பரிசிலுக்குப் போகின்ற புலவனுக்குச் சொல்லியது.

[இனிப் பிள்ளையாரைக் காணுமிடம் சொல்லுவர்]

'செருப்புகன்று' என்பது முதல் 'உரியன்' என்பது வரையில் ஒரு தொடர்.

(௬௭-௭௭ வரிகள்)

'சேரு புகன்று எடுத்த சேண் உயர் நெடுங்கொடி
வரி புனை பந்தொடு பாவை தூங்க'

(சுஎ-சுஅ வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) செரு புகன்று | = | போர் கூறி |
| எடுத்த | = | எடுத்த |
| சேண் | = | அதிதூரமாக |
| உயர் | = | உயர்ந்த |
| நெடுங்கொடி | = | நெடிய கொடி |
| வரி புனை | = | வகைந்து செய்யப்பட்ட |
| பந்தொடு | = | பந்துடனே |
| பாவை | = | செம்மகளான பாவை |
| தூங்க | = | தூங்க, |

'பொருநர் தேய்ந்த போர் அரு வாயில்'

(சுசு-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) பொருநர் | = | சத்துருக்கள் |
| தேய்த்த | = | கெடுத்த |
| போர் | = | அவர்களாற் பொருந்தற்கு, |
| அரு வாயில் | = | அரிதான வாயிலையுடைய, |

'திரு வீற்றிருந்த தீது தீர் நியமத்து
மாடம் மலி மறுகின் கூடல்'

(எ0-எக வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) திரு வீற்றிருந்த | = | தேவி வீற்றிருந்த |
| தீது தீர் | = | குற்றந் தீர்ந்த |
| நியமத்து | = | திருப்பதியான |

| | | |
|---|---|---|
| மாடம் மலி | = | மாடம் நெருங்கிய |
| மறுகு | = | தெரு |
| கூடல் | = | மதுரை, |

(வி-ரை) எனவே, தேவி வீற்றிருந்த திருப்பதியான மாடம் நெருங்கிய தெருவையுடைய மதுரைக்கு,

'குடவயின்,
இருஞ்சேற்று அகல் வயல் விரிந்து வாய் அவிழ்ந்த
முள் தாள் தாமரை துஞ்சி'

(எக-எஎ-வரிகள்)

| (ப ரை) | | | |
|---|---|---|---|
| | குடவயின் | = | மேற்கே |
| | இருஞ்சேற்று | = | மிகுந்த சேற்றினையுடைய |
| | அகல் வயல் | = | அகன்ற வயலிடத்து |
| | வாய் அவிழ்ந்து | = | வாய் மலர்ந்து |
| | விரிந்த | = | விரிந்த |
| | முள் தாள் | = | முள்ளைத் தாளிலேயுடைய |
| | தாமரை | = | தாமரையினிடத்தே |
| | துஞ்சி | = | நித்திரை பொருந்தி, |

'வைகறை
கள் கமழ் நெய்தல் ஊதி'

(எஎ-எச வரிகள்)

| (ப-ரை) | | | |
|---|---|---|---|
| | வைகறை | = | விடியற் காலத்திலே |
| | கள் கமழ் | | தேன் நாறுகின்ற |
| | நெய்தல் | = | நெய்தற் பூவை |
| | ஊதி | = | ஊதி, |

'ஏற்பட,

கண் போல் மலர்ந்த காமர் சுனை மலர்'

(எச-எரு-வது வரிகள்)

(ப-ரை) ஏற்பட = பகரப்பட்ட
கண்போல் = கண்ணை யொக்க
மலர்ந்த = மலர்ந்த
காமர் = அழகிய
சுனை மலர் = சுனையிற் செங்கழுநீர்ப் பூவின்,

'அம் சிறை வண்டின் அரி கணம் ஒலிக்கும்
குன்று அமர்ந்து உறைதலும் உரியன்'

(எசா-எஎ வது வரிகள்)

(ப-ரை) அம் சிறை = அழகிதான சிறகினையுடைய
வண்டின்
அரி கணம் = வண்டினங்கள்
ஒலிக்கும் = சத்திக்கும்
குன்று = திருப்பரங்குன்றினிடத்து
அமர்ந்து = பொருந்தி
உறைதலும் = எழுந்தருளியிருத்தலும்
உரியன் = உரியன், என்றவாறு,

'அதா அன்று'

(என-வது வரி)

அஃதான்று இரண்டாமஃதான்று = அதுவன்றியும், (வி-ரை) சுப்பிரமணியரின் திருவடிமுன் செல்லுவான்.

---

*திருப்பரங்குன்றம் சிறப்பு:— படைத்தற்கும், காத்தற்கும், அழித்தற்கும் உரிமையுடைய ஒளியினையும், தாளினையும் கையினையுமுடைய தெய்வயானையார் கணவன், குளிர்ந்த கடப்பமாலை அசையாநின்ற மார்பினையுடையவன், செங்காந்தட்கண்ணியைச் சூடிய திருமுடியுடையவன், வெற்றியும் புகழுமுடையவனுமாகிய ஸ்ரீ முருகக்கடவுளைத் தலைமை பெற்ற உள்ளத்தோடு நீ விரும்பினையாகுல், வீடுபேற்றைத் தவருமல் இப்பொழுதே பெறுவை. அது பெறுதற்கு அவன் யாண்டுறையு மென்னின், திருப்பரங்குன்றமர்ந் துறைதலு முரியன்.

---

*இம் மஹா க்ஷேத்திரமானது மதுரைமாநகருக்கு 3-நாழிகை வழி தூரத்திலுள்ளது.

இது ஸ்ரீ முருகப்பெருமான் பராசரர் புத்திரர்களைக் காத்தருளிய தலம். ஸ்ரீமுருகப்பெருமான் சூராதியரை வென்று, தேவர்கள் சிறையை மீட்டு, அவர்களை விண்ணுலகத்திற்கு குடியேற்றியபோது, தேவேந்திரன் அவர் பராக்கிரமத்துக்கு மகிழ்ந்து தனது புத்திரியாகிய தெய்வயானையம்மையை அவருக்குப் பாணிக்கிரஹணஞ்செய்து கொடுத்த மஹா க்ஷேத்திரமாம்.

*முருகா என்று மொழிந்து வரும் ஒரு பெண்ணின் கணவன் அதை யொழித்துத் தன் பெயர் கூறக் கற்பித்தும் அவள் கேளாமைக்காக அவள் கரத்தை சேதிப்ப, அக் கரம் ஸ்ரீ முருகப்பிரானருளால் வளரப்பெற்ற மஹா க்ஷேத்திரம்.

ஓம்

வேலுமயிலுந் துணை



## இரண்டாவது

# திருச்சீரலைவாய்

## [திருச்செந்தூர்]

---

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்

டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ

யகலா மீனி னவிர்வன விமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்
மனனேர் பெழுதரு வாணிற முகனே
*மாயிரு ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக
மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுக
மந்திர விதியின் மரபுளி வழாஅ
வந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செலசம முருக்கிக் [ருமுகங்
கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே யொ
குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே யாங்கம்
மூவிரு முகனு முறைநவின் றொழுகலி
னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபி னையர்க் கேந்திய தொருகை

---

*'மாயிருள் ஞால' என்னும் பாடம்.

புக்கஞ் சேர்த்திய தொருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய
யங்குசங் கடாவ வொருகை யிருகை [தொருகை
மையிரு வட்டமொரு டெஃகுவலந் திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை
பாடின் படுமணி யிரட்ட வொருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட வாங்கப்
பன்னிரு கையும் பாற்பட வியற்றி
யந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
வயிரெழுந் திசைப்ப வால்வளை நரல
வுரந்தலைக் கொண்ட வுருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
யுலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ
ரலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே
யதா அன்று.

## இதன் பொருள்

'வைந்நுதி' என்பது முதல் 'பண்பே' என்பது வரையில் ஒரு தொடர்.

(க-௯அ வரிகள்)

'வை நுதி பொருத வடு வாழ் வரி நுதல்'

(க-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | வை | = | கூரிய |
| | நுதி | = | முனை |
| | பொருத | = | வெட்டின |
| | வடு | = | புண் |
| | வாழ்தல் | = | அமர்தல் |
| | வரி | = | புகர் |
| | நுதல் | = | நெற்றி |

(வி-ரை) எனவே, கூரிய முனையினையுடைய அங்குசத்தாலே வெட்டின புண்ணமர்ந்த புகரையுடைய நெற்றியிலே,

'வாடா மாலை ஓடை ஒடு துயல்வர
படும் மணி இரட்டும் மருங்கின்'

(உ, ௩-வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | வாடாமாலை | = | பொன்னரிமாலை |
| | ஓடை | = | பட்டம் |
| | ஒடு | = | உடனே |
| | துயல்வர | = | அசைதர |
| | படும் மணி | = | ஓசை மணி |
| | இரட்டும் | = | ஒலிக்கும் |
| | மருங்கின் | = | பக்கத்திலே |

(வி-ரை) எனவே, நெற்றியிற் கட்டிய பட்டத்துடனே பொன்னரிமாலை யசைதர ஓசைமணி யிருபக்கத்திலும் ஒலிக்கவும்,

'கடுநடை,
கூற்றத்து அன்ன மாற்றரும் மொய்ம்பின்'

(௩, ௪-வரிகள்)

(ப-ரை) கடு நடை = கடிய செலவு
கூற்றத்து அன்ன = கூற்றம் போன்ற
மாற்றரும் = மாற்றுதற்கரிய
மொய்ம்பின் = வலியமொய்ம்பினையுடைய

(வி-ரை) எனவே, கடிய செலவும் கூற்றம்போன்ற மாற்றுதற்கரிய வலியினையுமுடைய,

'கால் கிளர்ந்து அன்ன வேழம் மேல் கொண்டு'

(௫-வது வரி)

(ப-ரை) கால் = காற்று
கிளர்ந்து அன்ன = கிளர்ந்ததை யொத்த
வேழம் = யானையின்
மேல் கொண்டு = மேலேறி வரப்பட்ட,

'ஐ வேறு உருவின் செய் வினை முற்றிய
முடியோடு'

(௬, ௭-வரிகள்)

(ப-ரை) ஐவேறு உருவின் = ஐந்து வகையாலே வேறு
செய் வினை = செய் தொழில் [பட்ட

| | | |
|---|---|---|
| முற்றிய | = | முற்றிய |
| முடியொடு | = | முடியுடனே, |

(வி-ரை) அவையாவன:—தாமம், பதுமம், பாமம், கிம்புரி, சேடம். இவை முடிக்கு ஐவேறுருவு. கோடகம், கிம்புரி, மகுடம், பதுமம், சாணகம் என்னு மைவகை முடியெனவுங்கொள்க. இதுவன்றிச் சடாமகுடம், கிரீடாமகுடம், தாண்டிகாமகுடம், அமைமகுடம், கண்ணிகாமகுடம் என்னும் ஐவகை முடியெனினு மமையும். இந்த வகையால் செய்தொழில் முற்றிய முடியுடனே,

'விளங்கிய முரண் மிகு திரு மணி
மின் உறழ் இமைப்பில் சென்னி பொற்ப'

(எ, அ-வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | விளங்கிய | = | விட்டு விளங்கிய |
| | முரண் மிகு | = | மாறுபாடுடைய |
| | திரு மணி | = | அழகிய இரத்தினங்கள் |
| | மின் உறழ் | = | மின்னை யொத்த |
| | இமைப்பில் | = | பிரகாசத்துடனே |
| | சென்னி | = | திருமுடியில் |
| | பொற்ப | = | பொலிய |

(வி-ரை) எனவே, விட்டுவிளங்கிய மாறுபாடுடைய, அழகிய விரத்தினங்கள் மின்னையொட்டி விளங்குந் திருமுடியிற் பொலிய,

'நகை தாழ்பு துயல்வரூஉம் வகை அமை பொலம் குழை'

(கூ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நகை | = | ஒளி |

| | | |
|---|---|---|
| தாழ்பு | = | தாங்குதல் |
| துயல்வரூஉம் | = | அசைதரும் |
| வகை | = | வேறுபட்ட தொழில் |
| அமைந்த | = | சமைத்த |
| பொலம்குழை | = | பொற்றோடு, |

(வி-ரை) எனவே, ஒளி தங்கி யசைதரும் வேறுபட்ட தொழிலாற் சமைத்த பொற்றோடு. பொலங்குழை யென்பதை "பொன்னென் கிளவி" என்பதனுன் முடிக்க.

'சேண் விளங்கு இயற்கை வாள் மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்ப'

(கo, கக வரிகள்)

(ப-ரை)

| | | |
|---|---|---|
| சேண் | = | தூரம் |
| விளங்குதல் | = | தோற்றம் |
| இயற்கை | = | இயல்பு |
| வாள் | = | ஒளி |
| மதி | = | திங்கள் |
| கவைஇ | = | சேர்ந்து |
| அகலா | = | நீங்காத |
| மீனின் | = | உடுக்களின் |
| அவிர்வன | = | பாடஞ்செய்வனபோல் |
| இமைப்ப | = | கிரணங்கள் விட்டு விளங்க; |

*தொல்காப்பியம்.—எழுத்ததிகாரம்—புள்ளி மயங்கியல்—61—சூத்திரம்.

(வி-ரை) எனவே, அதிதூரத்திலே தோன்றி இயல்பு பெற்ற ஒளியினையுடைய திங்களைச் சேர்ந்து, விட்டு விலகாத உடுக்களைப்போலப் பாடஞ் செய்வனவாய்த் தோட்டினது கிரணங்கள் விட்டு விளங்க,

'தாவு இல் கோள்கை தம் தொழில் முடிமார்
மனன் ஏர்பு எழுதரு'

(கஉ, கங-வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) தாவு இல் | = | கேடில்லாத |
| கொள்கை | = | கோட்பாடு |
| தம் தொழில | = | தங்கள் நியமம் |
| முடிமார் | = | முடிப்பார் |
| மனன் | = | நெஞ்சு |
| ஏர்பு | = | அழகு |
| எழுதரு | = | தோற்றந் தரும், |

(வி-ரை) எனவே, கேடில்லாத கோட்பாட்டொடு தங்கள் நியமங்கள் முடிப்பார் நெஞ்சினழகுபெறத் தோற்றந் தரும்,

'வாள் நிற முகன்'

(கங-வது வரி)

(ப-ரை) வாள் நிறமுகன் ... ஒளிவிடுகின்ற வாறுதிரு முகங்களை யுடையவன்,

(வி-ரை) அந்தத்திருமுகங்களின் படிவஞ் சொல்லில்,

'மா இரு ஞாலம் மறு இன்றி விளங்க
பல் கதிர் விரிந்தன்று ஒரு முகம்'

(கச-கரு வரிகள்)

(ப-ரை) மா = மிக்க

| | | |
|---|---|---|
| இரு ஞாலம் | = | பெரிய பூமி |
| மறு இன்றி | = | குற்றமில்லாதே |
| விளங்க | = | விளங்க |
| பல் கதிர் | = | பல கிரணங்கள் |
| விரிந்தன்று | = | விரிந்தாற்போலும் |
| ஒரு முகம் | = | ஒரு திருமுகம், |

(வி-ரை) எனவே, மிகவும் பெரிய பூமி குற்றமில்லாதே விளங்கப் பல கிரணங்களை விரித்தாற் போலும் ஒரு திருமுகம், மாயிரு ஒரு பொருட்பன்மொழி.

'ஒருமுகம்,
ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகி
காதலின் உவந்து வரம் கொடுத்தன்று'

(கடு-கஎ வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | ஒரு முகம் | = | ஒரு திருமுகம் |
| | ஆர்வலர் | = | ஏழையர் |
| | ஏத்த | = | இரந்து துதிக்க |
| | இனிது அமர்ந்து | = | இனிதாக வமர்ந்து |
| | ஒழுகி | = | ஒழுகி |
| | காதலின் | = | பிரியப்பட்டு |
| | உவந்து | = | மகிழ்ந்து |
| | வரம் | = | (அவர்களுக்கு வேண்டின வரங்களை |
| | கொடுத்தன்று | = | கொடாநிற்கும், |

(வி-ரை) எனவே, ஒரு திரு முகம்: ஏழையரிரந்து துதிக்க இனிதாகவமர்ந்தொழுகிக் காதலுடையவர்களுக்கு வேண்டின வரங்களைக் கொடாநிற்கும்.

'ஒருமுகம்'
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே'

(௯எ-௯௯ வரிகள்)

(ப-ரை) ஒரு முகம் = ஒரு திருமுகம்
மந்திர விதியின் உளி = மந்திரங்களினது விதி முறையினால்
மரபு = முறைமை
வழாஅ = வழுவாது
அந்தணர் = அந்தணருடைய
வேள்வி = வேள்விகளை
ஓர்க்கும்மே = திருவுள்ளத்தினடைக்கும்

(வி-ரை) எனவே, ஒரு திருமுகம் : மந்திரங்களினுடைய விதிமுறையினால்ஒழுக்கத்தை வழுவாத அந்தணருடைய வேள்விகளைத் திருவுள்ளத்தடைக்கும், 'அந்தணர்' என்பது அழகிய தட்பத்தினையுடையார்' என்பது 'மரபுளி' என்புழி உளி என்பது மூன்றுவதன்பொருள் படுவதோ ரிடைச் சொல்.

'ஒருமுகம்,
எஞ்சிய பொருள்களை ஏம் உற நாடி
திங்கள் போல திசை விளக்கும்'

(௯௯-௨௧ வரிகள்)

(ப-ரை) ஒரு முகம் = ஒரு திருமுகம்
எஞ்சிய = வேதங்களில் மறைந்த
பொருள்களை = பொருள்களை

| | | |
|---|---|---|
| ஏம் உற | = | இலக்கைப் பொருந்த |
| நாடி | = | ஆராய்ந்து |
| திங்கள் போல | = | சந்திரமண்டலம் போல |
| திசை | = | திக்குகளை |
| விளக்கும் | = | விளக்காநிற்கும், |

(வி-ரை) எனவே, ஒரு திருமுகம் வேதங்களின் மறைந்த பொருள்களை யிலக்கைப் பொருந்த வாராய்ந்து சந்திரமண்டலம்போலத் திக்குகளை விளக்கா நிற்கும் ஏமம் என்பது கடைக்குறைக்கப்பட்டது.

'ஒருமுகம்,
செறுநர் தேய்த்து செல் சமம் முருக்கி
கறுவு கொள் நெஞ்சமொடு களம் வேட்டன்று'

(உக-உங வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | ஒரு முகம் | = | ஒரு திருமுகம் |
| | செறுநர் | = | மாற்றலரை |
| | தேய்த்து | = | கெடுத்து |
| | செல் | = | வரவு |
| | சமம் | = | போர் |
| | முருக்கி | = | கொன்று |
| | கறுவு | = | வெகுளியை |
| | கொள் | = | (கோட்பாடு) கொண்ட |
| | நெஞ்சமொடு | = | உள்ளத்தோடே |
| | களம் | = | போர்க்களத்தை |
| | வேட்டன்று | = | விரும்பாநிற்கும் |

(வி-ரை) எனவே, ஒரு திருமுகம் மாற்றலரைக் கெடுத் துப்போர்க்கு வரப்பட்ட பேரைக் கொன்று வெகுளியைக் கொண்ட உள்ளத்தோடே போர்க்களத்தை விரும்பா நிற்கும்,

'ஒருமுகம்,
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியோடு நகை அமர்ந்தன்று'

(௱-உரு வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | ஒரு முகம் | = | ஒரு திருமுகம் |
| | குறவர் | = | குறவரிடத்து வந்த |
| | மடமகள் | = | மடப்பத்தினையுடைய பெண் பிள்ளை |
| | கொடி போல் | = | வல்லிசாதக் கொடிபோன்ற |
| | நுசுப்பின் | = | இடையினையும் |
| | மடவரல் | = | கற்பின் வரலாற்றினையுமுடைய |
| | வள்ளியொடு | = | வள்ளி நாச்சியருடனே |
| | நகை | = | மகிழ்ச்சி |
| | அமர்ந்தன்று | = | பொருந்தாநிற்கும், |

(வி-ரை) எனவே, ஒரு திருமுகம்: குறவர்பால் வந்த மடப்பத்தினையும் வல்லிசாதக் கொடி போன்ற இடையி னையும் கற்பின் வரலாற்றினையுமுடைய வள்ளி நாச்சியா ருடனே மகிழ்ச்சி பொருந்தாநிற்கும்.

'ஆங்கு அம்
மூ இரு முகனும் முறை நவின்று ஒழுகலின்'
(உரு-உசு வரிகள்)

(ப-ரை) ஆங்கு = அவ் வனத்திலே
அம் மூவிரு முகனும் = அவ்வாறு திருமுகங்களும்
முறை = முன்பு கூறப்பட்ட முறைமையிலே
நவின்று = விளங்கி
ஒழுகலின் = ஒழுகாநிற்கும்,

'ஆரம் தாழ்ந்த அம் பகடு மார்பின்
செம் பொறி வாங்கிய மொய்ம்பின்'
(உஎ-உஅ வரிகள்)

(ப-ரை) ஆரம் = ஆபரணம்
தாழ்ந்த = தாங்கிய
அம் = அழகு
பகடு = பெருமை
மார்பின் = மார்பிலே
செம்பொறி = சீதேவி
வாங்கிய = கைக்கொண்ட
மொய்ம்பின் = வலியினையும்,

(வி-ரை) எனவே, ஆபரணந்தாங்கிய அழகிய பெருமை பொருந்திய மார்பிலே சீதேவியைக் கொண்ட வலியினையும்,

'சுடர் விடுபு,
வள் புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்'
(உஅ-உகூ வரிகள்)

(ப-ரை) சுடர் விடுபு = ஒளி விடுகின்ற
வள் புகழ் = வளவிய புகழானது

நிறைந்து = நிறைந்து
வசிந்து = வளர்ந்து
வாங்கு = நீண்டு
நிமிர் தோள் = நிமிர்ந்த தோள்,

(வி-ரை) எனவே, ஒளிவிடுகின்ற வளவிய புகழ் நிறைந்து வளர்ந்து நீண்டு நிமிர்ந்த தோள்கள்,

'விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒரு கை'

(௱௦-வது வரி)

(ப-ரை) விண் = ஆகாயம்
செலல் = இயக்கம்
மரபின் = முறைமையாகவுடைய
ஐயர்க்கு = தேவர்களுக்கு
ஏந்தியது = அமைத்தது
ஒருகை = ஒரு கரம்,

(வி-ரை) எனவே, ஆகாயத்திலே இயக்கத்தை முறைமையாகவுடைய தேவர்களுக்கு அபயத்தங் கொடாநிற்கும் ஒரு கரம்,

'உக்கம் சேர்த்தியது ஒரு கை'

(௱௧-வது வரி)

(ப-ரை) உக்கம் = மருங்குல்
சேர்த்தியது = சேர்த்தியது
ஒரு கை = ஒரு கரம்,

'நலம் பெறு, கலிங்கத்து குறங்கின் மிசை
அசைஇயது ஒருகை'

(௱௨-வது வரி)

(ப-ரை) நலம் பெறு = அழகு பெற்ற

கலிங்கத்து = புடவையையுடைய
குறங்பின்
மிசை = தொடையின்மீதே
அசைஇயது = வைத்தது
ஒரு கை = ஒரு கரம்,

(வி-ரை) எனவே அழகுபெற்ற தொடையிடத்துப் புடவையின் மீதே வைத்ததொரு கரம்,

'அங்குசம் கடாவ ஒரு கை'
(ருரு-வது வரி)

(ப-ரை) அங்குசம் = ஆனைத்தோட்டி
கடாவ = செலுத்த
ஒரு கை = ஒரு கரம்,

(வி-ரை) எனவே, ஆனையைத் தோட்டியாற் செலுத்தி நடத்த நிற்கும் ஒருகரம்,

'இரு கை,
ஐயிரு வட்டமோடு எஃகு வலம் திரிப்ப'
(ருரு-ருச வரிகள்)

(ப-ரை) இரு கை = இரண்டு கரமும்
ஐயிரு = ஐந்தாகிய
வட்டமொடு = பெருத்த பரிசையுடனே
எஃகு = வேல்
வலம் திரிப்ப = வெற்றிபெறச்சுற்ற,

(வி-ரை) எனவே, ஐந்தாகிய பெருத்த பரிசையுடனே வேல் வெற்றிபெறச்சுற்ற இரண்டு கரமும், இதுவன்றி, ஐயிருவட்டம்-பத்துத் திருமுகத்தினையுடைய கேடக மெனினுமமையும்,

'ஒருகை, மார்போடு விளங்க'
(ருச-ருருவரிகள்)

(ப-ரை) ஒரு கை = ஒரு கரம்

மார்பொடு விளங்க = திருமார்பின்கண் மவுன மந்திரத்தைப் பேணா நிற்கும்,

'ஒருகை, தாரோடு பொலிய'

(௧௫-௧௬ வரிகள்)

(ப-ரை) ஒரு கை = ஒரு கரம்
தாரொடு = திருமாலையை
பொலிய = திருத்தாநிற்கும்,

'ஒருகை,
கீழ்வீழ் தொடியொடு மீமிசை கொட்ப'

(௧௬-௧௭ வரிகள்)

(ப-ரை) ஒரு கை = ஒரு கரம்
கீழ் வீழ் தொடியொடு = பார வளையோடே
மீமிசை = மென்மேலும்
கொட்ப = சுற்றுநிற்கும்,

'ஒருகை,
பாடு இன் படு மணி இரட்ட'

(௧௭-௧௮ வரிகள்)

(ப-ரை) ஒரு கை = ஒரு கரம்
பாடு = பாடுமிசை
இன் = இனிமை
படு மணி = ஆடுகின்ற மணி
இரட்ட = ஒலிப்ப,

(வி-ரை) எனவே, ஒரு கரம் இசை யினிமையாக ஆடுகிற மணியை ஒலியாநிற்கும்.

'ஒருகை,
நீல் நிற விசும்பின் மலி துளி பொழிய'
(௩அ-௩௯ வரிகள்)

(ப-ரை) ஒரு கை = ஒரு கரம்
நீல் நிறம் = நீல நிறத்தையுடைய
விசும்பின் = ஆகாயத்தின்
மலி = மிக்க
துளி = துளியை
பொழிய = பொழியாநிற்கும்;

'ஒருகை,
வான் அர மகளிர்க்கு வதுவை சூட்ட'
(௩௯-௪0 வரிகள்)

(ப-ரை) ஒரு கை = ஒரு கரம்
வான் அர மகளிர்க்கு = தெய்வ மகளிர்க்கு
வதுவை = மாலையை
சூட்ட = சூட்டாநிற்கும்

'ஆங்கு அ
பன்னிரு கையும் பாற்பட இயற்றி'
(௪0-௪௧ வரிகள்)

(ப-ரை) ஆங்கு = ஆக
அ பன்னிரு = முற் கூறப்பட்ட பன்னிரண்டு
கையும் = கரங்களும்
பாற்பட இயற்றி = (முன்சொன்ன ஆறு திருமுகத்திற்கும்) பொருந்தும் வகைசெய்யும்.

(வி-ரை) முன் சொன்ன,

1. 'மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்க'
கசு-வது வரி)
என்ற திருமுகத்திற்கு
'நீல் நிற விசும்பின் மலி துளி பொழிய'
(ருகூ-வது வரி)
என்றது இடக்கரமாகவும்,
'அங்குசம் கடாவ'
(ருரு-வது வரி)
என்றது வலமாகவுங் கொள்க,

2. 'ஆர் வலர்' (ககூ-வது வரி) என்ற திருமுகத்திற்கு
'உக்கம் சேர்த்தியது' (ருக-வது வரி)
என்றது இடக்கரமாகவும்
'நலம்பெறு கலிங்கத்து' (ருஉ-வது வரி)
என்றது வலக்கரமாகவுங் கொள்க.

3. 'மந்திர விதியின் மரபுளி வழாஅ'
(கஅ-வது வரி)
என்ற திருமுகத்திற்கு
(ருஅ-வது வரி)
'பாடு இன் படுமணி இரட்ட'
என்றது இடக்கரமாகவும்,
'விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது
(ருo-வது வரி)
என்றது வலக்கரமாகவுங் கொள்க

4. 'எஞ்சிய பொருள்களை' (உo-வது வரி)
என்ற திருமுகத்திற்கு

'கீழ் வீழ் தொடியொடு' (௱எ-வது வரி)
என்றது இடக்கரமாகவும்,
'மார்பொடு விளங்க' (௱௫-வது வரி)
என்றது வலக்கரமாகவுங் கொள்க.

5. 'செறுநர்த் தேய்த்து' (உஉ-வது வரி)
என்ற திருமுகத்திற்கு
'ஐயிரு வட்டம்' (௱ச-வது வரி)
என்றது இடக்கரமாகவும்,
'எஃகு வலம் திரிப்ப' (௱ச-வது வரி)
என்றது வலக்கரமாகவுங் கொள்க

6. 'குறவர் மடமகள்' (உச-வது வரி)
என்ற திருமுகத்திற்கு
'தாரொடு பொலிய' (௱௬-வது வரி)
என்றது இடக்கரமாகவும்,
'வான் அர மகளிர்க்கு வதுவை சூட்ட'
(ச0-வது வரி)
என்றது வலக்கரமாகவுங் கொள்க.

'அந்தரம் பல் இயம் கறங்க திண் காழ்
வயிர் எழுந்து இசைப்ப வால் வளை நரல'

(சஉ, ச௱ வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) அந்தரம் | = | ஆகாயத்திலே |
| பல் இயம் | = | பல வாச்சியம் |
| கறங்க | = | முழங்க |
| திண் | = | திண்ணிய |
| காழ் | = | கறுப்பு |

| | | |
|---|---|---|
| வயிர் | = | கொம்பு |
| எழுந்து | = | மிக்கு |
| இசைப்ப | = | ஊத |
| வால் | = | வெண்மை |
| வளை | = | சங்கு |
| நரல | = | குறிப்ப, |

(வி-ரை) எனவே, ஆகாயத்தினிடத்திலே பல வாச்சிய முழங்க, திண்ணியதாய்க்கறுத்த கொம்பு மிகவு மூத, வெண் சங்கு குறிப்ப

'உரம் தலை கொண்ட உரும் இடி முரசமொடு'
(கூச-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | உரம் | = | வலி |
| | தலை கொண்ட | = | மேல் கொண்ட |
| | உரும் இடி | = | உருமிடித்தாற் போன்ற |
| | முரசமொடு | = | முரசுடனே, |

'பல் பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ'
(கூரு-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | பால் பொறி | = | பல வரிகள் |
| | மஞ்ஞை | = | மயில் |
| | வெல் கொடி | = | வெற்றிக்கொடி |
| | அகவ | = | படர, |

(வி-ரை) எனவே, பல வரிகளை யுடைத்தாய மயிற்கொடி முன்னெடுத்துப் படர,

'விசும்பு ஆறு ஆக விரை செலல் முன்னி'

(சசு-வது வரி)

(ப-ரை) விசும்பு = ஆகாயம்

ஆறு ஆக = வழியாக

விரை செலல் = (முற்கூறப்பட்ட வேழத்தை மேல்கொண்டு துறக்கத் துக்கு) விரைந்து செல்லலை;

முன்னி = உன்னி,

'உலகம் புகழ்ந்த ஓங்கு உயர் விழு சீர்
அலைவாய் சேறலும் நிலைஇய பண்பே'

(சஎ, சஅ-வது வரிகள்)

(ப-ரை) உலகம் = உயர்ந்தோர்

புகழ்ந்த = துதித்த

ஓங்கு உயர் = மிக்க

விழு சீர் = விழுமிய அழகு

அலைவாய் சேறலும் = அலைவாய்ச் செறிதலும்

நிலைஇய பண்பே = சார்வு தரும்,

(வி-ரை) எனவே, உயர்ந்தோராற் துதிக்கப்பட்ட மிக்க விழுமிதான வழகுபெற்ற சீரலைவாய் என்கிற திருப் பதியிலே சார்வு தரும் என்றவாறு. 'அலைவாய்' என்றது நாமனூரலைவாயை.

'அதா அன்று'

(சகூ-வது வரி)

(இதன் பொருள்) அதுவன்றியும்.

*திருச்சீரலைவாய் சிறப்பு:—வேழமேற்கொண்டு ஆறு முகங்களும் தொழில்களிடத்துச் செய்யும் முறைமைகளைப் பயின்றுநடந்த, அவற்றிற் கேற்பத் தோள்கள் ஆங்காங்கு

வளைந்தும் நிமிர்ந்து மிருக்க, பன்னிரு கையும் முகங்களின் பகுதியிலே படும்படி தொழில்செய்ய, திருச்சேந்தூர் என்னுந் திருப்பதியேற எழுந்தருளுதலும் அவர்க்கு நிலைபெற்ற குணமாம்.

---

*இது திருநெல்வேலிக்குத் தெற்கே மூன்று காத தூரத்தில் சமுத்திரதீரத்தி லுள்ளது; வியாசரால் உபதேசிக்கப்பட்ட சுகப் பிரம ரிஷியும், நாரதரால் உபதேசிக்கப்பட்ட வெள்ளை யானையும் பூஜைசெய்து அநுக்கிரகம் பெற்ற மஹா க்ஷேத்திரம்.

முருகப்பிரான் தேவர்களின் இடர்களைப் போக்குவிக்கும் பொருட்டுச் சூரபன்மன், சிங்கமுகாசூரன், தாருகாசூரன், பாநு கோபன் முதலிய துஷ்டர்களாகிய அசுரர்களைச் சம்ஹரித்தபின் வீரவாகுதேவர், வீரகேசரி, வீரமாகேந்திரன், வீரமாகேச்சுரன் வீரபுரந்தரன், வீரராக்கதன், வீரமார்த்தாண்டன், வீரராந்தன், வீர தீரன் ஆகிய நவவீரர்களுடனும், பூத வீரர்களுடனும், இலக்க வீரர் களுடனும் படைவீடுகொண் டெழுந்தருளி யிருந்த மஹா க்ஷேத்திர முமாம்.

இது கந்தமாதனம், சந்தனாசலம், திருச்சேந்தி, திருச் சேந்தில், திருச்சேந்தூர் என்னும் நாமதேயங்களாலும் கூறப் படுகின்றது.

உ

முருகன் துணை

வேலு மயிலுந் துணை



மூன்றாவது

# *திருவாவினன்குடி

[பழநி]

---

சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிமை தைஇய வூன்கெடு மார்பி
னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகற்

பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்

தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை

யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசி றூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவி

னல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவல ரின்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவி
னவிர் தளிர் புரையு மேனிய ரவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலைய ரின்னகைப்

பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குன்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்

புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்

வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனு
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
வுலகங் காக்கு மொன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
வேமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப்
பகலிற் றோன்று மிகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரோ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
வுருமிடித் தன்ன குரலினர் விழுமிய
வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மா
ரந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னா
ளாவி னன்குடி யசைதலு முரியன தாஅன்று

## இதன் பொருள்

'சீரை தைஇய' என்பது முதல் 'உரியன்'
என்பது வரையில் ஒரு தொடர்.

(க-நிக வரிகள்)

'சீரை தைஇய உடுக்கையர்'

(க-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப ரை) | சீரை | = | மரவுரியை |
| | தைஇய | = | தைத்த |
| | உடுக்கையர் | = | உடையினையுடையார், |

'சீரோடு,
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்'

(க, உ-வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | சீரோடு | = | அழகுடனே |
| | வலம்புரி | = | சங்கு |
| | புரையும் | = | ஒக்கும் |
| | வால் | = | வெள்ளை |
| | நரை முடியினர் | = | நரைக்கொண்டையை யுடையார், |

'மாசு அற இமைக்கும் உருவினர்'

(ங-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | மாசு அற | = | குற்றமற |

இமைக்கும் = விளங்கும்
உருவினர் = நிறத்தினையுடையார்,

'மானின்
உரிவை தைஇய ஊன் கெடு மார்பின்
என்பு எழுந்து இயங்கும் யாக்கையர்'
(ங-ரு வரிகள்)

(ப-ரை) மானின் உரிவை = மான்தோல்
தைஇய = தைத்திட்ட
ஊன் கெடு = தசை மாண்ட
மார்பின் = மார்பில்
என்பு எழுந்து = என்பெழுந்து
இயங்கும் = இயங்குமாற்போன்ற
யாக்கையர் = உடம்பினையுடையார்,

'நன் பகல்,
பலவுடன் கழிந்த உண்டியர்'
(ரு-சு வரிகள்)

(ப-ரை) நன் பகல் = நல்ல திவசங்கள்
பலவுடன் = பலவற்றோடு
கழிந்த = ஒழிந்த
உண்டியர் = உணவினையுடையார்,

'இகலோடு,
செற்றம் நீக்கிய மனத்தினர்'
(சு, எ வரிகள்)

(ப-ரை) இகலோடு = மாறுபாட்டுடனே

செற்றம் = சினத்தை
நீக்கிய = ஒழிந்த
மனத்தினர் = மனத்தினையுடையார்,

'யாவதும்,
கற்றோர் அறியா அறிவினர்'

(எ, அ வரிகள்)

(ப-ரை) யாவதும் = எவ்வகைப்பட்ட பொருள் களையும்
கற்றோர் = கற்றுவல்லுநராலும்
அறியா = அறியப்படாத
அறிவினர் = அறிவின் மிக்கார்,

'கற்றோர்க்கு,
தாம் வரம்பு ஆகிய தலைமையர்'

(அ, கூ வரிகள்)

(ப-ரை) கற்றோர்க்கு = பல கலைஞானங்களையு மறிந்தோர்க்கு
தாம் = தாங்கள்
வரம்பு ஆகிய = எல்லையாகிய
தலைமையர் = மிக்கோர்;

'காமமோடு,
கடுஞ்சினம் கடிந்த காட்சியர்'

(கூ, க0 வரிகள்)

(ப-ரை) காமமொடு கடுஞ்சினம் — காமம் வெகுளி முதலானவை யெல்லாம்

| | | |
|---|---|---|
| கடிந்த | = | தவிர்ந்த |
| காட்சியர் | = | தோற்றத்தினை யுடையார், |

'இடும்பை,
யாவதும் அறியா இயல்பினர்'

(கo, கக வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) இடும்பையாவதும் | = | துக்கமெல்லாம் |
| அறியா | = | அறியப்படாத |
| இயல்பினர் | = | ஒழுக்கத்தினை யுடையார், |

'மேவர,
துணி கல் காட்சி முனிவர் முன் புக'

(கக-கஉ வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) மேவர | = | (முற் கூறப்பட்ட சிறப்புக்களெல்லாம்) பொருந்த |
| துனி இல் | = | துயர மில்லாத |
| காட்சி | = | தோற்றம் |
| முனிவர் | = | இருடிகள் |
| முன் புக | = | முன்னே புகுத, |

(வி-ரை) எனவே, முற்கூறப்பட்ட சிறப்புக்களெல்லாம் பொருந்தத்துயரமில்லாத தோற்றத்தினையுடையாராய் இருடிகள் முன்வந்து புகுத.

'புகை முகந்து அன்ன மாசு இல் தூ உடை'

(கங-வது வரி)

(ப-ரை) புகை = புகையை
முகந்து அன்ன = கையாலே முகந்தாற் போன்று நொய்யவாய
மாசு இல் = குற்றமில்லாத
தூ உடை = பரிசுத்தமாகிய உடையினையுடையார்;

'முகை வாய் அவிழ்ந்த தகை சூழ் ஆகத்து'

(கச-வது வரி)

(ப-ரை) முகை = மொட்டு
வாய் அவிழ்ந்த = கிணிகிணிவாய்க்கொண்ட
தகை சூழ் = மாலை சூழ்ந்த
ஆகத்து = மார்பினையும்,

(வி-ரை) எனவே, மொட்டுப்பூக் கிண்கிணிவாய்க் கொண்ட பக்குவத்திலே கட்டின மாலை சூழ்ந்த மார்பினையும்,

'செவி நேர்பு வைத்த செய்வு உறு திவவின்
நல் யாழ் நவின்ற நயன் உடை நெஞ்சின்'

(கரு, கசு வரிகள்)

(ப-ரை) செவி = செவிக்கு
நேர்பு வைத்த = பொருந்தவைத்த
செய்வு உறு = தொழில்களாலமைத்த
திவவின் = நரப்புக்கருவியினையுடைய

கடிந்த = தவிர்ந்த
காட்சியர் = தோற்றத்தினை யுடையார்,

'இடும்பை,
யாவதும் அறியா இயல்பினர்'

(கO, கக வரிகள்)

(ப-ரை) இடும்பையாவதும் = துக்கமெல்லாம்
அறியா = அறியப்படாத
இயல்பினர் = ஒழுக்கத்தினை யுடையார்,

'மேவர,
துணி கல் காட்சி முனிவர் முன் புக'

(கக-கஉ வரிகள்)

(ப-ரை) மேவர = (முற் கூறப்பட்ட சிறப்புக்களெல்லாம்) பொருந்த
துனி இல் = துயர மில்லாத
காட்சி = தோற்றம்
முனிவர் = இருடிகள்
முன் புக = முன்னே புகுத,

(வி-ரை) எனவே, முற்கூறப்பட்ட சிறப்புக்களெல்லாம் பொருந்தத்துயரமில்லாத தோற்றத்தினையுடையாராய் இருடிகள்முன்வந்து புகுத.

'புகை முகந்து அன்ன மாசு இல் தூ உடை'

(கரு-வது வரி)

(ப-ரை) புகை = புகையை
முகந்து அன்ன = கையாலே முகந்தாற் போன்று நொய்யவாய
மாசு இல் = குற்ற மில்லாத
தூ உடை = பரிசுத்தமாகிய உடையினையுடையார்;

'முகை வாய் அவிழ்ந்த தகை சூழ் ஆகத்து'

(கச-வது வரி)

(ப-ரை) முகை = மொட்டு
வாய் அவிழ்ந்த = கிணிகிணிவாய்க்கொண்ட
தகை சூழ் = மாலை சூழ்ந்த
ஆகத்து = மார்பினையும்,

(வி-ரை) எனவே, மொட்டுப்பூக் கிண்கிணிவாய்க் கொண்ட பக்குவத்திலே கட்டின மாலை சூழ்ந்த மார்பினையும்,

'செவி நேர்பு வைத்த செய்வு உறு திவவின்
நல் யாழ் நவின்ற நயன் உடை நெஞ்சின்'

(கரு, கசு வரிகள்)

(ப-ரை) செவி = செவிக்கு
நேர்பு வைத்த = பொருந்தவைத்த
செய்வு உறு = தொழில்களா லமைத்த
திவவின் = நரப்புக்கருவியினையுடைய

| | | |
|---|---|---|
| நல் யாழ் | | நல்லியாழினது |
| நவின்ற | = | சொற் பொருந்திய |
| நலன் உடை | = | நயப்பினையுடைய |
| நெஞ்சின் | = | நெஞ்சத்தோடே, |

'மேல் மொழி மேவலர் இன் நரம்பு உளர'

(கஎ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | மெல் மொழி | = | மெத்தென்ற சொல் |
| | மேவலர் | = | சேர்ந்தோர் |
| | இன் நரம்பு | = | இனிய நரம்பு |
| | உளர | = | வாசிக்க, |

(அவர் வித்தியாதரர்)

'நோய் இன்று இயன்ற யாக்கையர்'

(கஅ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நோய் இன்று | = | நோயில்லாதபடி |
| | இயன்ற | = | செய்த |
| | யாக்கையர் | = | உடம்பினர் |

'மாவின்,
அவிர் தளிர் புரையும் மேனியர்'

(கஅ, கக வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | மாவின் | = | மாவினது |
| | அவிர் | = | பாடஞ் செய்யும் |
| | தளிர் புரை | = | தளிரினை யொத்த |
| | மேனியர் | | நிறத்தினையுடையார், |

'அவிர்தோறும்,
பொன் உரை கடுக்கும் திதலையர்'
(கக, உ௦ வரிகள்)

(ப-ரை) அவிர்தொறும் = பாடஞ்செய்யுந்தோறும்
பொன் உரை
கடுக்கும் = பொன்னுரைத்தாற்போன்ற
திதலையர் = துத்தியாகிய பொறியினை யுடைய மேனியர்,

'இன்னகை'
பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல்'
(உ௦, உக வரிகள்)

(ப-ரை) இன்னகை = அழகிய வொளி
பருமம் = அரைப்பட்டிகை.
தாங்கிய = தரித்த
பணிந்து = தாழ்ந்து
ஏந்து = ஏந்தின
அல்குல் = அல்குல்,

(வி-ரை) எனவே, அழகிய வொளி பொருந்திய அரைப் பட்டிகை தரித்த தாழ்ந் தேந்தின வல்குலையுடைய,

'மாசு இல் மகளிரோடு மறு இன்றி விளங்க'
(உஉ-வது வரி)

(ப-ரை) மாசு இல் = குற்றமில்லாத.
மகளிரொடு = மடந்தையருடனே
மறு இன்றி = முன்சொன்ன வித்தியாதாரும் இதற்குரித்தான மடந்தையரு மொழிய இதற்குரித் தல்லாத பேர்கள் கூடாதே

விளங்க = விளங்கப்பட்டு,

(வி-ரை) இதுவன்றியும், 'மாசு இல் மகளிர்' என்பதற்குக் 'குற்றமில்லாத தெய்வக் குறத்திகள்' என்பாருமுளர்

'கடு ஓடு ஒடுங்கிய தூம்பு உடை வால் எயிற்று
அழல் என உயிர்க்கும்'

(உ௩, உ௪ வரிகள்)

(ப-ரை) கடு = விடம்
ஓடு ஒடுங்கிய = ஒடுங்கி யோடப்பட்ட
தூம்பு உடை = தொளையையுடைய
வால் எயிற்று = வெள்ளை யெயிற்றினையும்
அழல் என = நெருப்பென
உயிர்க்கும் = உயிர்க்கும்,

(வி-ரை) எனவே, விடமொடுங்கி யோடப்பட்ட தொளையையுமுடைய, வெள்ளை யெயிற்றையும் அழல் போன்று விடு முயிர்ப்பினையுமுடைய,

'அஞ்சுவரு கடுந்திறல்,
பாம்பு பட புடைக்கும்'

(உ௪, உ௫ வரிகள்)

(ப-ரை) அஞ்சு = கண்டோரஞ்சும்படி
வரு = வருகின்ற
கடுந்திறல் = மிகுந்த வலி
பாம்பு பட = பாம்பு சாக
புடைக்கும் = அடிக்கும்,

(வி-ரை) எனவே, கண்டோ ரஞ்சும்படி வருகின்ற பாம்பை சாகவடிக்கும்,

'பல் வரி கொடுஞ்சிறை,
புள் அணி நீள் கொடி செல்வனும்'
(உ௫-உ௬ வரிகள்)

(ப-ரை)

| | | |
|---|---|---|
| பல் வரி | = | பல வரிகள் |
| கொடுஞ்சிறை | = | வளைந்த சிறகு |
| புள் | = | கருளன் |
| அணி | = | அணிந்த |
| நீள் கொடி | = | மிகு கொடி |
| செல்வனும் | = | விண்டுவும், |

(வி-ரை) எனவே, பல வரிகளையும் வளைந்த சிறகினையு முடைய கருளனை யணிந்த மிக்க கொடியினையுடைய விண்டுவும்,

'வேள் ஏறு,
வலவயின் உயரிய பலர் புகழ் திணி தோள்
(உ௬-உ௭ வரிகள்)

(ப-ரை)

| | | |
|---|---|---|
| வெள் ஏறு | = | வெள்ளை யிடபம் |
| வலவயின் | = | வெற்றியினால் |
| உயரிய | = | ஏறிய |
| பலர் புகழ் | = | பலரும் புகழ்கின்ற |
| திணி தோள் | = | திண்ணிய தோளினையுடைய, |

(வி-ரை) எனவே, வெள்ளை யிடபத்தை வெற்றியினா லேறிக்கொண்டு பலரும் புகழ் திண்ணிய தோளினையுடைய,

'உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண் மிகு செல்வனும்'
(உ௮-உ௯ வரிகள்)

(ப-ரை) உமை அமர்ந்து விளங்கும்... பாகத்திலே உமையாள் விளங்கவும்பட்டு

இமையா = இமைப் பில்லாத
மூவெயின் = மூன்று நயனத்தை யுடையராய் முக்கண் மூன்று கோட்டையாகிய திரிபுரங்களை
முருக்கிய = வென்ற
முரண் மிகு = மிக்க வலியினையுடைய
செல்வனும் = உருத்திரனும்,

(வி-ரை) எனவே, வெள்ளை நிறத்தினையுடைய இடபத்தை மேற்கொண்டருளிய பலர் புகழ்கின்ற திண்ணிய தோளினையுடைய பாகத்திலே உமையாள் விளங்கவும் பட்டு இமைப்பில்லாத மூன்று நயனத்தினையுடைய திரிபுரங்களை வென்ற மிக்க வலியினையுடைய உருத்திரனும்,

'நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து'

(௩௦-வது வரி)

(ப-ரை) நூற்றுப்பத்து = நூற்றுப்பத்தாயிரம்
அடுக்கிய = அடுக்கிய
நாட்டத்து = மென்மேல்வைத்த நயனங்களை யுடையனுமாய்

'நூறுபல்,
வேள்வி முற்றிய வென்று அடு கொற்றத்து'

(௩௦, ௩௧-வரிகள்)

(ப-ரை) பல் = பல வகையான
நூறு வேள்வி = நூறு யாகம்
முற்றிய = முடித்து

வென்று அடு = கொன்ற
கொற்றத்து = வெற்றியினையுடைய,

'ஈரிரண்டு ஏந்திய மருப்பின் எழில் நடை
தாழ் பெரும் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்'

(௬௨, ௬௪ வரிகள்)

(ப-ரை) ஈரிரண்டு = நாலு
மருப்பின் = கோட்டினையும்
ஏந்திய = எடுத்து
எழில் நடை = அழகியதாய்ச் செல்லப்பட்ட
தாழ் = தாழ்ந்து
பெரும் = பெருத்த
தடக்கை = வலிய துதிக்கையினையுடைய
உயர்ந்த = உயர்ந்த
யானை = யானையாகிய அயிராவதத்தின்
எருத்தம் ஏறிய = கழுத்தின்மேற் கொண்ட
திரு கிளர் = திரு மிக்க
செல்வனும் = செல்வனாகிய இந்திரனும்,

'நால் பெரும் தெய்வத்து'

(௬௫-வது வரி)

(இ-ள்) 'நாற்பெருந்தெய்வம்' என்றார், அந்தணர் தெய்வம், அரையர் தெய்வம், வசியர் தெய்வம், சூத்திர தெய்வம் என்பதைச் சிலப்பதிகாரத்துங் கண்டு கொள்க.

'நல் நகர் நிலைஇய'

(௫௫-வது வரி)

(ப-ரை) நல் நகர் = நல்ல நகரிகளையும்
நிலைஇய = நிலைபெறுத்துவானமைத்து,

'உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கை'

(௫௬-வது வரி)

(ப-ரை) உலகம் = உலகத்தை
காக்கும் = காக்கவேண்டுமென்னு
ஒன்றுபுரி
கொள்கை = ஒருமைப்பாட்டினை யுடையராய்,

'பலர் புகழ் மூவரும் தலைவர் ஆக'

(௫௭-வது வரி)

(ப-ரை) பலர் = பலரும்
புகழ் = புகழப்பட்ட
மூவரும் = முத்தேவரும்
தலைவர் ஆக = தலைவராக,

'ஏமுறும் ஞாலந் தன்னில் தோன்றி'

(௫அ-வது வரி)

(ப-ரை) ஏமுறும் = ஐயமிக வுடைத்தாய
ஞாலம்தன்னில் = பூமியினிடத்திலே
தோன்றி = வந்து விளங்கி,

'தாமரை பயந்த தாவு இல் ஊழி
நான்முக ஒருவன் சுட்டி'

(௫௯, ௬0 வரிகள்)

(ப-ரை) தாமரை = தாமரைப் பூவின்கண்

| | | |
|---|---|---|
| பயந்த | = | தோன்றி |
| தாவு இல் | = | கேடில்லாத |
| ஊழி | = | காலத்தினையுடைய |
| நான்முக ஒருவன் | = | நான்முகனாய அயனுக்காக (முன்சொன்ன மூவரும் |
| சுட்டி | = | பூமியின்கண் வந்து தோன்றி |

(வி-ரை) அது, பிள்ளையார் அயனைச் சிறையிடுகையில் அவர் எழுந்தருளியிருக்குந் திருவாவினன்குடியிற் சென்று அயனை விடுவிக்கப் பூமியின்கண் வந்ததெனக்கொள்க.

'காண்வர,
பகலில் தோன்றும் இகல் இல் காட்சி'
(சo, சக வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | காண்வர | = | காட்சி பெற |
| | பகலில் | = | பகலாகிய அருக்கனைப்போல |
| | தோன்றும் | = | தோன்றாநின்ற |
| | இகல் இல் | = | மாறுபாடில்லாத |
| | காட்சி | = | தோற்றம், |

'நால் வேறு இயற்கை'
(சஉ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நால் வேறு | = | நான்கு வேற்றுமைப்பட்ட |
| | இயற்கை | = | இயல்பு, |

வி-ரை) எனவே, காட்சி பெற ஆதித்தனைப்போல விளங்கி மாறுபாடில்லாத தோற்றமுடைத்தாய் நாலு வேற்றுமைப்பட்ட வியல்பு பெற்ற பின்னரும்,

நால்வே றியற்கை—"சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என நின்ற நாலு வேற்றுமைப்பட்ட வியற்கை" என்பாரு முளர்.

'பதினொரு மூவர்'

(௬௨-வது வரி)

(ப-ரை) பதினொரு மூவர் ... வெவ்வேராகச் சொல்லப் பட்ட பதினொரு (மூவராவார்)

வி-ரை) எனவே, மூன்று பதினொன்றுதலால் முப் பத்துமூவரெனக்கொள்க. அவர்களைப் பிரித்துக் காண்பது:—உருத்திரர் பதினொருவர், ஆதித்தர் பன்னிரு வர், வசுக்கள் எண்மர், மருத்துவ ரிருவர், ஆக வேற்றுமை நாலாகிய தேவர்கள் முப்பத்துமூவரையுமெனக்கொள்க.

'ஓடு, ஒன்பதிற்றிரட்டி உயர் நிலை பெறீஇயர்'

(௬௨, ௬௩ வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) | ஓடு | = இவர்களுடனே |
| | ஒன்பதிற்றிரட்டி | = பதினெண் பூமி |
| | உயர் நிலை | = மிக்க பதங்களையும் |
| | பெறீஇய | = பெற்றுடையருமாய், |

(வி-ரை) எனவே, முற்கூறப்பட்ட தேவர்கள் முப் பத்து மூவருடனே பதினெண் பூமியின் மிக்க பதங்களையும் பெற்றுடையருமாய், ஒன்பதிற்றிரட்டி-பதினெண் கணங்க ளென்பாரு முளர்.

[பதினெண் கணங்களாவார் :—

1. தேவர்
2. சித்தர்
3. அசுரர்
4. தைத்தியர்
5. கருடர்
6. கின்னரர்
7. நிருதர்
8. கிம்புருடர்
9. கந்தருவர்
10. இயக்கர்
11. விஞ்சையர்
12. பூதர்
13. பைசாசர்
14. அந்தரர்
15. முனிவர்
16. உரகர்
17. ஆகாசவாசிகள்
18. போக பூமியர்கள்

என இவர்.]

'மீன் பூத்து அன்ன தோன்றலர்'

(சச-வது வரி)

(ப-ரை) மீன் = உடுக்கள்

பூத்து அன்ன = ஆகாயத்திலே விளங்கினாற் போன்ற

தோன்றலர் = தோற்றத்தினையுடையராய்,

'மீன் சேர்பு,
வளி கிளர்ந்து அன்ன செலவினர்'

(சசு, சரு வரிகள்)

(ப-ரை) மீன் சேர்பு = மின்னுடனே

வளி = காற்று

கிளர்ந்து அன்ன = கிளர்ந்தாற் போன்ற

செலவினர் = செலவினையுடையார்,

'வளியிடை,
'தீ எழுந்து அன்ன திறலினர்'
(சரு, சசு வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | வளியிடை | = | காற்றுடனே |
| | தீ | = | அக்கினி |
| | எழுந்து அன்ன | = | எழுந்தாற் போன்ற |
| | திறலினர் | = | செலவினையுடையராய், |

'தீபட
உரும் இடித்து அன்ன குரலினர்'
(சசு, சஎ வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | தீ பட | = | அக்கினி தோன்றும்படி |
| | உரும் இடித்து அன்ன | = | இடியிடித்தாற் போன்ற |
| | குரலினர் | = | சத்தத்தையுடையராய், |

'விழுமிய,
உறு குறை மருங்கில் தம் பெறு முறை கோண்மா'
(சஎ; சஅ வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப ரை) | விழுமிய உறு | = | தவங்களுக் குறுதியான |
| | குறை | = | குறைவற்ற |
| | மருங்கில் | = | இடங்களிலே |
| | தம் | = | தங்களால் |
| | பெறும் | = | பெறவேண்டிய |
| | முறை | = | தொழில்களை |
| | கொண்மார் | = | கொண்டிருப்பான் வேண்டி, |

'அந்தரக் கோட்பினர் வந்து உடன் காண'
(சகூ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | அந்தரம் | = | ஆகாசத்து |

| | | |
|---|---|---|
| கொட்பினர் | = | மின்னுகின்ற கோட்பாட்டினையுடையார் |
| வந்து | = | வந்து |
| உடன் காண | = | திரண்டு சேவிக்க, |

'தாவு இல் கோள்கை மடந்தையோடு சின்னாள்
ஆவினன்குடி அசைதலும் உரியன்'

(௫௦-௫௧-வது வரிகள்)

(ப-ரை)

| | | |
|---|---|---|
| தாவு இல் | = | கேடில்லாத |
| கொள்கை | = | கொள்கையையுடைய |
| மடந்தையோடு | = | தெய்வயானையாருடனே |
| சின்னாள் | = | சில நாள் |
| ஆவினன்குடி | = | திருவாவினன்குடியிடத்தே |
| அசைதலும் | = | எழுந்தருளியிருத்தலும் |
| உரியன் | = | உரியன் |

என்றவாறு.

அயனைச் சுட்டித் தேவர்கள் வந்த காரணமென்னையோவெனின், தெய்வயானையாரைத் திருமணம் கொண்டருளும்போது உருத்திரன் அரி வலாரி முதலாய தேவரெல்லாம் சேவித்திருக்கையிலே அயன் "நாம் வேளத்தனை வேண்டிக்கொள்ளக் காரணமென்?" என அதனைப் பிள்ளையார் திருவுள்ளத்தடைத்து அவன் பதத்தை மாற்றி விடுகையான் "அவன் பதமீண்டும் முதவவேண்டும்" என்று வந்தார்களெனக் கொள்க, இதனைச் "சித்தன் வாழ்வு" என்று கூறுவாரு முளர். சித்தன் என்பது பிள்ளையாருக்கொருபெயர்.

'அதா அன்று'

(௱௬௧-வது வரி)

(இ-ள்) அது அன்றியும்.

திருவாவினன்குடிச் சிறப்பு :— பலரும் புகழும்படியான திரிமூர்த்திகளும் தலைவராகவேண்டி, அதற்குக் குறைபாடு உண்டாக்கின பிரஹ்மதேவரை உண்மை நிலையில் நிறுத்தக் கருதி, திருமாலும், உருத்திரரும், தேவேந்திரனும், ஆதித்தரும், வசுக்களும், மருத்துவரும், பதினெண் கணங்களும் வந்து தன்னைக் காணும்படித் திருவாவினன்குடியில் எழுந்தருளியிருத்தலும் உரியன்.

உ

முருகன் துணை

வேலு மயிலுந் துணை

## நான்காவது

# திருவேரகம்

[சுவாமிமலை]

---

இருமூன் றெய்திய வியல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
யறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை
மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
யுச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலு முரியன தாஅன்று

## இதன் பொருள்

'இருமூன்று'' என்பது முதல் ''உரியன்'
என்பது வரையில் ஒரு தொடர்
(க, கஙு, வரிகள்)

'இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது'
(க-வது வரி)

(ப-ரை) இருமூன்று = ஆறு தொழிலையும்
எய்திய = அடைந்த
இயல்பினன் = ஒழுக்கத்தின் (அதிவைதிகாசாரம்)
வழாஅது ... வழுவாது,

(வி-ரை) தொழில்கள் ஆறுவன--ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல். ஈதல் ஏற்றல் என்பனவாம்.

'இருவர் சுட்டிய பல் வேறு தோல் குடி'
(உ-வது வரிகள்)

(ப-ரை) இருவர் = மாதாவையும் பிதாவையும்
சுட்டிய = குறித்த
பல் வேறு = பலவாக வேறுபட்ட
தொல்குடி = பழையமரபாயுள்ளார்,

(வி-ரை) எனவே, அறுவகையான ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல். ஈதல், ஏற்றல் என்கிற அறுவகைத் தொழிலையும் அடைந்த ஒழுக்கத்தினையுடைய வைதிகாசாரம் வழுவாது, மாதாவையும் பிதாவையுங் குறித்த பலவாக வேறுபட்ட பழைய மரபாயுள்ளோர்,

'அறு நான்கு இரட்டி இளமை நல் யாண்டு'
(ங-வது வரி)

(ப-ரை) இளமை = இளைதாகிய

நல் யாண்டு = நல்ல வயது
அறு நான்கு = இருபத்துநாலை
இரட்டி = இரட்டித்தால் நாற்பத்தெட்டு,

(வி-ரை) எனவே, இளையதாகிய நல்ல வயதை,

'ஆறினில் கழிப்பிய அறன் நவில் கொள்கை'
(ச-வது வரி)

(ப-ரை) ஆறினில் = வேதஞ் சொன்ன வழியிலே பிரமசரியம் எனப்படு மொழுக்கத்திலே
கழிப்பிய = கழித்து
அரன் = தருமம்
நவில் = ஓதி
கொள்கை = கோட்பாடு,

(வி-ரை) எனவே, தனக்கு, முறைமையான வேதஞ் சொன்ன வழியிலே, பிரமசரிய மெனப்படு மொழுக்கத்தாலே அறுநான்கிரட்டிய நாற்பத்தெட்டு வயதைக் கழித்து தருமசாஸ்திரங்களை யோதி, இந்தக் கோட்பாட்டுடனே வியாகரணம், சோதிடம், நிருத்தம், சிக்ஷை, ஆறிற்கழிப்பிய-சைவம், பாசுபதம், சுத்தம் சாவிதியங்க ளாறுமுகமென்று சொல்லப்பட்ட ஆறுசமயங்களினும் கழித்துச் சந்தேகிய யெனினுமமையும்.

'மூன்று வகை குறித்த'
(ரு-வது வரி)

(ப-ரை) மூன்று வகை ... மூன்று பிரிவாய்
குறித்த ... நிச்சயித்த,

(வி-ரை) எனவே, மூன்றுவது ஒன்று வேதத்தை வழங்கவும், ஒன்று தேவர்கட்குத் தட்சணை கொடுக்கவும், ஒன்று பூலோகத்தை இலட்சை பண்ணவும் இவ்வாறாய்,

'முத்தீச் செல்வத்து'

(௯-வது வரி)

(ப-ரை) முத்தீ செல்வத்து ... காருகபத்திய மென்றும் தட்சிணாக்னி யென்றும் ஆகவநீய மென்றும் மூன்றாகச் சொல்லப்பட்ட அக்கினிச் செல்வத்து

(வி-ரை) எனவே, இங்ஙனம் மூன்றாய் நிச்சயித்து அக்கினிகளைத் தமக்குப் பெறாகவுடைய,

'இரு பிறப்பாளர்'

(கூ-வது வரி)

(ப-ரை) இரு பிறப்பாளர் = மாதா வுதரத்தினின்று முற்பவித்ததொரு பிறப்பு, உபநயநத்தினா் தோன்றிய தொருபிறப்பு, இவற்றாலிரண்டு பிறப்புடையார்

(வி-ரை) சம்மந்தர் "கற்றாங் கெரியோம்பி" எனப் பிறர் கூறலு மிப்பெற்றிநோக்கி.

'பொழுது அறிந்து நுவல'

(கூ-வது வரி)

(ப-ரை) பொழுது அறிந்து = உதயகாலத்தும் மத்தியானகாலத்தும் அத்தமான காலத்தும் தாபனம், அநுட்டானம், பூஜை செய்வதறிந்து

நுவல = இந்த மூன்று காலத்திலே மூன்று தொழிலையும் முயன்று செய்ய,

'ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண்'

(எ-வது வரி)

(ப-ரை) ஒன்பது = ஒன்பது இழையையும்
கொண்ட = நவசத்தியாகக் கொண்டு
மூன்று புரி = மூன்று புரியாய
நுண் ஞாண் = முறுக்கின வடத்தை மும்மூர்த்தியாகக் கொண்டு,

'புலரா காழகம் புலர உடீஇ'

(அ-வது வரி)

(ப-ரை) புலரா = (ஸ்நானம் பண்ணிப்) புலராத
காழகம் = புடைவையை
புலர = உடம்பிலே புலர
உடீஇ = உடுத்து,

'உச்சி கூப்பிய கையினர் தற்புகழ்ந்து'

(கூ-வது வரி)

(ப-ரை) தற்புகழ்ந்து = பிள்ளையார் சிபாதத்தை நினைந்து
உச்சி கூப்பிய = தலைமேற் கை குவித்து
கையினர் = கையினையுடையவர்களாய்

'ஆறு எழுத்து அடக்கிய அருமறை கேள்வி'

(கய-வது வரி)

(ப-ரை) ஆறு எழுத்து = ஆறு அக்ஷரத்தை
அடக்கிய = தன்னிடத்தடக்கிய
அருமறை கேள்வி = வேதாகமங்களை

(வி-ரை) " ஆறு திருவெழுத்துங் கூறு நிலைகண்டு " எனப் பிறர் கூறுதலானு மறிக.

'நா இயல் மருங்கில் நவிலப் பாடி'

(கக-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நா இயல் | = | நாவா லியன்ற |
| | மறுங்கில் | = | இடத்திலே |
| | நவில பாடி | = | கைவர வோதி, |

'விரை உறு நறு மலர் ஏந்தி'

(கஉ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | விரை உறு | = | தேனை உற்ற |
| | நறு மலர் | = | நறு நாற்றங்களையுடைய திருப்பள்ளித் தாமங்களை |
| | ஏந்தி | = | ஏந்திக்கொண்டு, |

'பெரிது உவந்து, ஏரகத்து உறைதலும் உரியன்'

(கஉ, கங-வது வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | பெரிது உவந்து | = | மிகவும் விரும்பி |
| | ஏரகத்து | = | திருவேரகமென்னும் திருப்பதியிலே |
| | உறைதலும் | = | எழுந்தருளி யிருத்தலும் |
| | உரியன் | = | உரியன் என்றவாறு. |

(வி-ரை) திருவேரக மென்பது மலைநாட்டகத்தோர் திருப்பதி.

'அதா அன்று'

(கங-வது வரி)

(ப-ரை) அதா அன்று ... அதுவன்றியும்

*திருவேரகத்தின் சிறப்பு:—இருபிறப்பாளர் நீராடுங் கால் தோய்க்கப்பட்ட கலிங்கம் உடம்பிலே கிடந்து புலர உடுத்து, மணமிகுந்த நறுமலரை யேந்திக் கூப்பிய கையராய் நவிலப்பாடி, வழிபடு கால மறிந்து தோத்திரங்களைக் கூற, அதற்குப் பெரிது மகிழ்ந்து திருவேரகத்து அமர்ந்துறை தலு முரியன்; அதுவன்றி

†இது கும்பகோணத்துக்கு 2-நாழிகை வழிதூரத்தி லிருக்கின்றது; சாமி மலை என்று பெயர் பெற்று வழங்கப் பட்டுவருகிறது.

பிரமதேவன் சிவதரிசனஞ் செய்து வரும் மார்க்கத்தில் ஸ்ரீபால சுப்பிரமணியக் கடவுளைக் கண்டு வந்தனஞ்செய்யா தேக, அவர் பிரமனை யழைத்துப் பிரணவத்திற்குப் பொருள்கேட்க, அவன் விடை கூறாமை பற்றி, சிரசிற் குட்டிச் சிறையிட்டுத் தாமே சிருட்டித் தொழிலை நடத்த, சிவபெருமான் அங்கு தோன்றிப் பிரமன் சிறையை நீக்கச் சொல்லியும் விடாது பிறகு விடுத்துச் சிவபிரானுக்குப் பிரணவத்தை யுபதேசித்த தலமுமாம்.

உ

முருகன் துணை

வேலு மயிலுந் துணை

## ஐந்தாவது

# குன்றுதோறாடல்

---

பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேல
னம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணிய
னறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்

கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட் டேறற்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்

குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
யிணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை *யிலையுட னறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை

திருந்துகா ழல்குற் றிளைப்ப வுடீஇ

---

* 'யிலையுடைநறும்பு' என்றும் பாடம்.

மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்

குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில்சேவலங்
கொடிய னெடியன் றொடியணி தோள
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்

மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையி *னிகல்வே லேந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத் தந்து
குன்றுதோ றாடலுநின்றதன்பண்பே யதாஅன்று.

---

## இதன் பொருள்

'பைங்கொடி என்பது முதல் பண்பே'
என்பது வரையில் ஒரு தொடர்.
(க-உஅ வரிகள்)

'பைங்கொடி நறைக்காய் இடை இடுபு வேலன்'
(க-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | பைங்கொடி | = | பச்சிலைக் கொடி |
| | நறைக்காய் | = | ஜாதிக்காய் |
| | இடை இடுபு | = | இடை யிட்டு |
| | வேலன் | = | வெறியாடுவான், |

---

* 'னியல வேந்தி' என்றும் பாடம்

(வி-ரை) எனவே, பச்சிலைக் கொடியுஞ் சாதிக்காயு மிடையிட்டு வெறியாடுவான்,

'அம் போதிபுட்டில் விரைஇ குளவியோடு
வெள் கூதாளம் தொடுத்த கண்ணியன்'

(உ, ரு-வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | அம் | = | அழகிய |
| | பொதிபுட்டில் | = | தக்கோலப்புட்டில் |
| | விரைஇ | = | இலை விரவிய |
| | குளவியொடு | = | தாளிப்பூவோடு |
| | வெள் கூதாளம் | = | வெள்ளைக் கூதாளப்பூ, |
| | தொடுத்த | = | பிணைத்த |
| | கண்ணியன் | = | மாலையன், |

'நறும் சாந்து அணிந்த கேழ் கிளர் மார்பின்'

(சு-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நறு | = | நாற்றத்தையுடைய |
| | சாந்து | = | சந்தனத்தை |
| | அணிந்த | = | பூசிய |
| | கேழ் | = | நிறம் |
| | கிளர் | = | மிகுதி |
| | மார்பின் | = | மார்பினையுடைய, |

(வி-ரை) எனவே, நறு நாற்றத்தையுடைய சந்தனத்தைப் பூசி நிற மிக்க மார்பினையுடையராய்,

'கோடும் தோழில் வல் வில் கோலெஇய கானவர்'

(ரு-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | கொடும் தொழில் | = | கொடிய தொழில் |
| | வல் வில் | = | வலிய வில் |
| | கொலை இய | = | கொலை பொருந்திய |
| | கானவர் | = | வேடர், |

(வி-ரை) எனவே, கொடிய தொழிலினையுடைய வில்லாற் கொலை பொருந்திய வேடுவர்,

'நீடு அமை விளைந்த தேம் கண் தேறல்
குன்றகம் சிறுகுடி கிளையுடன்மகிழ்ந்து'

(சு, எ-வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நீடு அமை | = | நெடிய மூங்கிலில் |
| | விளைந்த | = | உண்டான |
| | தேம் | = | இனிமை |
| | கண் | = | இடம் |
| | தேறல் | = | மது |
| | குன்றகம் | = | மலையிடத்து |
| | சிறுகுடி | = | சிறுகுடி |
| | கிளையுடன் | = | சுற்றத்துடனே |
| | மகிழ்ந்து | = | கூட உண்டு களித்து, |

(வி-ரை) எனவே, நெடிய மூங்கிலரிசியி லுண்டாகச் சமைத்திட் டினிமைக் கிடமாகிய மதுவை மலையிடத்துச் சிறுகுடிச் சுற்றத்துடனேகூட வுண்டு களித்து,

தொண்டகம் சிறு பறை குரவை அயர'

(அ-வது வரி)

(ப ரை) தொண்டகம் = குறிஞ்சிநிலத்தின்கண் தொண்டக மென்கிற
சிறு பறை = சிறு பறையை
குரவை அயர = குரவைக் கூத்தாட,

(வி-ரை) எனவே, குறிஞ்சிநிலத்துக் குரித்தாயதாய்ச் சிறிய பறையையுங் கொட்டிக் குரவைக் கூத்தையாடி, குரவை என்றது கைகோத்தாடுங் கூத்து. இப்பெற்றி நோக்கி,

"குரவை யாச்சிய ரோடு கோத்ததும்"
எனப் பெரியாரும் பணித்தமையானு மறிக.

'விரல் உளர்ப்ப அவிழ்ந்த வேறு படு நறும் கால்'

(கூ-வது வரி)

(ப-ரை) விரல் = விரலாலே
உளர்ப்ப = அலர்த்த
அவிழ்ந்த = அலர்ந்த
வேறு படு = பல வகைப்பட்ட
நறும் = நறுநாற்றத்தைப் பொருந்திய
கால் = தாளினையுடைய,

'குண்டு சுனை பூத்த வண்டு படு கண்ணி
இணைத்த கோதை அணைத்த கூந்தல்'

(கo, கக வரிகள்)

(ப-ரை) குண்டு = ஆழமாகிய
சுனை பூத்த = சுனையிலே யலர்ந்த
வண்டு படு = வண்டு தங்குகின்ற
கண்ணி = பூக்களை
இணைத்த = தொடுத்த

| | | |
|---|---|---|
| கோதை | = | மாலை |
| அணைத்த | = | சேர்த்தின |
| கூந்தல் | = | கூந்தல், |

(வி-ரை) எனவே, தொடுத்த மாலை சேர்த்தின கூந்தலினையுடைய,

'முடித்த குல்லை இலையுடன் நறும் பூ
சேம் கால் மராஅத்த வால் இணர் இடை இடுபு
சுரும்பு உண தோடுத்த பெரும் தண் மா தழை'

(கஉ, கச வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | முடித்த | = | முடித்தாற் போன்ற |
| | குல்லை | = | கஞ்சம் |
| | இலையுடன் | = | இலையுடனே |
| | நறும்பூ | = | நாற்றத்தையுடைய பூ |
| | செம் கால் | = | சிவந்த காம்பினையுடைய |
| | மராஅத்த | = | கடம்பு |
| | வால் இணர் | = | வெள்ளைக் கொத்துப்பூ |
| | இடை இடுபு | = | இடையிட்டு |
| | சுரும்பு உண | = | வண்டு படிய |
| | தொடுத்த | = | தொடுத்த |
| | பெரும் தண் | = | மிகவும் தட்பம் பொருந்திய |
| | மா தழை | = | பெரியதழை, |

(வி-ரை) எனவே, முடித்தாற்போன்ற கஞ்சக் குல்லையுடனே நறு நாற்றத்தையுடைய சிவந்த காம்பினையுடைய கடம்பின் வெள்ளைக் கொத்துப்பூ இடையிட்டு வண்டு படியத் தொடுத்த மிகவும் தட்பம் பொருந்திய தழையை,

'திருந்து காழ் அல்குல் திளைப்ப உடீஇ'
(கஉ-வது வரி)

(ப-ரை) திருந்து காழ் = அழகிய புடவை பொருந்திய
அல்குல் = அல்குலிலே
திளைப்ப = அசைய
உடீஇ = உடுத்து,

'மயில் கண்டு அன்ன மடநடை மகளிரோடு'

(கரு-வது வரி)

(ப-ரை) மயில் கண்டு அன்ன = சாயலுடைமையால் மயில் கண்டாற்போன்ற
மடம் = மடப்பம் பொருந்திய
நடை = ஒழுக்கத்தையுடைய
மகளிரொடு = மகளிர் தழையை யுடுத்து,

'செய்யன் சிவந்த ஆடையன்'

(கஎ-வது வரி)

(ப-ரை) செய்யன் = செந்நிறத்தை உடையவனாய்
சிவந்த
ஆடையன் = சிவந்த பரிவட்டத்தினையுடையவன்

'செவ்வரை,
செயலை தண் தளிர் துயல் வரும் காதினன்'

(கஎ, கஅ-வது வரி)

(ப-ரை) செவ்வரை = சிவந்த மலை
செயலை = அசோகு
தண் தளிர் = குளிர்ந்த தளிர்
துயல் வரும் = அசைதரும்
காதினன் = காதினையுடையான் ;

'கச்சினன் கழலினன் செச்சை கண்ணியன்'

(கக-வது வரி)

(ப-ரை) கச்சினன் = கச்சைக் கட்டினவன்;
கழலினன் = திருக்கழலினை யுடையான்;
செச்சைக் கண்ணியன் = வெட்சிமாலையை யுடையான்;

'குழலன் கோட்டன் குறும்பல் இயத்தன்'

(உ0-வது வரி)

(ப-ரை) குழலன் = ஊது குழலினையுடையான்;
கோட்டன் = குறிக்குங் கொம்பினை யுடையான்;
குறும் = சிறிய வாய
பல் = பல
இயத்தன் = வாச்சியங்களை யுடையான்;

'தகரன், மஞ்ஞையன் புகர் இல் சேவல் அம் கோடியன்'

உக, உஉ-வரிகள்)

(ப-ரை) தகரன் = தகரக் கடாவினையுடையான்;
மஞ்ஞையன் = மயிலினை யுடையவன்;
புகர் இல் = குற்ற மில்லாத
சேவலங் கொடியன் = கோழிக்கொடி-யோன்;

(வி-ரை) எனவே, குற்ற மில்லாத கோழிக் கொடியினை யுடையான்;

'நெடியன் தொடி அணி தோளன்'

(உஉ-வது வரி)

(ப-ரை) நெடியன் = உயர்ந்துள்ளோன்;
தொடி அணி = வளை யணிந்த
தோளன் = கையினையுடையவன்;

'நரம்பு ஆர்த்து அன்ன இன் குரல் தொகுதியொடு
குறும் பொறி கொண்ட நறும் தண் சாயல்
மருங்கில் கட்டிய நிலன் நேர்பு துகிலினன்'

(உ௩, உரு வரிகள்)

(ப-ரை) நரம்பு = யாழ்
ஆர்த்து அன்ன = வாசித்தாற் போன்ற
இன் குரல் = இனிதாகப் பாடுகின்ற
தொகுதியொடு = கூட்டத்தோடே
குறும் பொறி = சிறிய பொறி
கொண்ட = பொருந்திய
நறும் = நாற்றம்
தண் = குளிர்ச்சி
சாயல் = நிறம்
மருங்கில் = திருமருங்குலிலே
கட்டிய = சேர்த்திய
நிலன்நேர்பு
துகிலினன் = இந்திரநீலத் திருப்பரி
வட்டத்தினையுடையவன்;

'முழவு உறழ் தடம் கையின் இகல் வேல் ஏந்தி'

(உசு-வது வரி)

(ப-ரை) முழவு = மத்தளம்
உறழ் = ஒத்தல்
தடம் கை = பெரிய கை
இகல் வேல் = மாறுபாட்டைச் செய்கின்ற
வேலை
ஏந்தி = ஏந்திக்கொண்டு,

மலைமகண் மகனே! மாற்றோர் கூற்றே!
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி!
வானோர் வணங்குவிற் றானைத் தலைவ!
மாலை மார்ப! நூலறி புலவ!

செருவி லொருவ! பொருவிறன் மள்ள!
அந்தணர் வெறுக்கை! அறிந்தோர் சொன்மலை!
மங்கையர் கணவ! மைந்த ரேறே!
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ!
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து

விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே!
அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக!
*நசையினர்க் கார்த்து மிசைபே ராள!
அலர்ந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்!

மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேள்!
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்!
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி!
போர்மிகு பொருந! †குரிசிலு மெனப்பல

யானறி யளவையி னேத்தி யாணது
நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையி
னின்னடி யுள்ளி ‡வந்தன னின்னொடு
புரையுந ரில்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்

---

* 'நசையுநர்' என்றும் பாடம்.

† 'குரிசி லெனப்பல' என்றும் பாடம்.

‡ 'வந்தனெ' என்றும் பாடம்.

வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
யளியன் றானே முதுவா யிரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
வினியவு நல்லவு நனிபல வேத்தித்

தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
யணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
யஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென

வன்புடை நன்மொழி யளைஇ விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்
தொருநீ யாகத் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசி னல்குமதி பலவுடன்
வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்

தார முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
தண்கமழ் மலரிறால் சிதைய நன்பல
வாசினை முதுசுளை கலாவ மீமிசை

நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுத
லிரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப்பொன் கொழியா

வாழை முழுமுத றமியத்தாழை
யிளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலோ

டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென விழிவரு மருவிப்

பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

## இதன் பொருள்

"சிறுதினை" என்பது முதல் "கந்துடை நிலையினும்." என்பது வரையில் ஒரு தொடர்.

(௧-௯ வரிகள்)

'சிறுதினை மலரோடு விரைஇ மறி அறுத்து'

(௧-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) | சிறு தினை | = நுண்ணிய தினையரிசியை |
| | மலரொடு | = பூவுடனே |
| | விரைஇ | = கலந்து வைத்து |
| | மறி | = ஆட்டின் மறியை |
| | அறுத்து | = கொன்று, |

'வாரணக் கொடியோடு வயிர்ப்புடன் நிறீஇ'

(2-வது வரி)

(ப-ரை) வாரணக் கொடியொடு = கோழிக்கொடியுடனே
வயிர்புடன் = கொம்புடன் குறிக்க
நிறீஇ = நிறுத்தி,

(வி-ரை) 'வயிற்பட' எனப் பாடமுரைத் துரை விரிப்பாருமுளர்.

'ஊர் ஊர் கொண்ட சீர் கெழு விழவினும்'

(௩-வது வரி)

(ப-ரை) ஊர் ஊர் = ஊர்கடோறும்
கொண்ட = தாணினைத்த காரிய முடிப்பதற்கு அப்பிள்ளையாரை நோக்கி
சீர் கெழு = அழகு பொருந்திய
விழவினும் = திருநாள் நடக்குமிடத்தினும்,

(வி-ரை) அடுக்குப் பன்மை.

'ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்'

(௪-வது வரி)

(ப-ரை) ஆர்வலர் = ஒன்றுற் குறைவுடையார்
ஏத்த = ஏத்த
மேவரு = மேவிநிற்கும்
நிலையினும் = இடங்களினும்,

(வி-ரை) 'ஆர்வத்தைச் செய்யும் மக்கள்' எனினு மமையும்.

'வேலன் தைஇய வெறி அயர் களனும்'

(ரு-வது வரி)

(ப-ரை) வேலன் = வேலன்
தைஇய = இழைத்த
வெறி அயர் = வெறியாடும்
களனும் = இடங்களினும்,

(வி-ரை) பிள்ளையார்வேலைத் தனக்கடையாளமாக வுடையனாகலினங்ஙனங் கூறினார். இது 'வெறியறி சிறப்பின் வேலன்' எனப் புறத்திற் கூறியது.

'காடும், காவும், கவின் பெறு துருத்தியும்,
ஆறும், குளனும், வேறு பல் வைப்பும்'

(சு, எ-வரிகள்)

(ப-ரை) காடும் = காட்டிடத்துப்
காவும் = பொழில்களிடங்களினும்
கவின் பெறு = அழகு பொருந்திய
துருத்தியும் = ஆற்றிடைக் குறைகளினும்
ஆறும் = ஆறுகளினும்
குளனும் = குளங்களினும்
வேறு = வேறுபட்டு
பல் = பலவாயிருந்துள்ள
வைப்பும் = ஊர்களினும்,

'சதுக்கமும் சந்தியும், புது பூ கடம்பும்,
மன்றமும், பொதியிலும், கந்துடை நிலையினும்,

(அ, கூ வரிகள்)

(ப-ரை) சதுக்கமும் = நாற்சந்திகளினும்
சந்தியும் = சந்திகளினும்
புது = புதிதாக
பூ = பூக்கப்பட்ட
கடம்பும் = கடம்புகளினிடத்தினும்
மன்றமும் = ஊர்க்கு நடுவேயிருக்கு மரத்தடியினும்
பொதியினும் = அம்பலங்களினும்
கந்துடை நிலையினும் = யானைத்தறியினிடத்தினும்;

(வி-ரை) பொதியினும்-பொதியமலை யென்பாரு முளர். கந்துடை நிலையினும் - பசு முதலான மிருகம் உறிஞ்சுதறியெனினுமமையும்.

'மாண்டலை என்பது முதல் 'அறிந்தவாறே'
என்பது வரையில் ஒரு தொடர்.

(கo-கூஉ-வரிகள்)

'மாண் தலை கொடியொடு மண்ணணி அமைவர'

(கo-வது வரி)

(ப-ரை) மாண் = மாட்சிமை
தலை = தலைப்பட்ட
கொடியொடு = கோழிக்கொடியுடனே
மண்ணணி அமைவர = யாருடி யமைவும் வரவும் பட்டு,

(வி-ரை) 'ஆண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர' என்று பாடமாயின், 'மயிற் கொடியோடு விளங்கக் கண்டார்க்கு நிறைவரயுமைஎனினும்.'ம

'நெய்யோடு ஐயவி அப்பி, ஐதுரைத்து'
(கக-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) | நெய்யோடு | = நெய்யுடனே |
| | ஐயவி | = சிறு கடுகு |
| | அப்பி | = நெற்றியிலே அப்பி, |
| | ஐது உரைத்து | = சிறிது மந்திரங்களையு மோதி, |

'குடந்தம்பட்டு கொழுமலர் சிதறி'

(கஉ-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) | குடந்தம் பட்டு | = கைகூப்பி நெஞ்சிலே வைத்து |
| | கொழு மலர் | = அழகிய மலரை |
| | சிதறி | = தூவி, |

(வி-ரை) 'குடவென்பது குடந்தமென நின்றது' எனவும், 'அது தடவென்பதுபோல விளைவை யுணர்த்து மோருரிச் சொல்லடியாகப் பிறந்த பெயருமாம்' எனவும், 'அது நால்விரன் முடக்கிப் பெருவிரனிறுத்தி நெஞ்சிடை வைப்பது குடந்தமாகும்' எனவும் விரிப்பாருமுளர்.

• 'முரண் கொள் உருவின் இரண்டுடை உடீஇ'
• (கந-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) | முரண் கொள் | = தம்முள் மாறு கொண்ட |
| | உருவின் | = வடிவினையுடைய |
| | இரண்டுடை | = இரண்டு வெண்பட்டையும் |
| | உடீஇ | = உடுத்து, |

'சேந்நூல் யாத்து, வேள் பொரி சிதறி'

(கச-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) சேந்நூல் | = | செந்நூலாலே |
| யாத்து | = | காப்பு கட்டி, |
| வெள் பொரி | = | வெள்ளிய பொரியை |
| சிதறி | = | தூவி, |

'மதம் வலி நிலைஇய மாத்தாள் கொழுவிடை
குருதி ஒடு விரைஇ தூ வெள் அரிசி
சில் பலி செய்து'

(கரு-கசா-வது வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) மதம் | = | களி |
| வலி | = | வலிமை |
| நிலைஇய | = | நிலைபெற்ற |
| மாத்தாள் | = | பெரிய கால் |
| கொழுவிடை | = | யானைத்திரள் |
| குருதி | = | உதிரம் |
| ஒடு | = | உடனே |
| விரைஇ | = | கலந்து |
| தூ | = | தூயதாய |
| வெள் அரிசி | = | வெள்ளையரிசி |
| சில் பலி | = | பல பலிகளையும் |
| செய்து | = | கொடுத்து, |

(வி-ரை) எனவே, மதத்தையும், வலியையும் நிலைபெற்றப் பெரிய காலினை யுடைத்தாய யானைத்திரளை யறுத்து உதிரத்துடனே தூயதாய வெள்ளையரிசி கலந்து பல பலிகளையுங் கொடுத்து,

'பல் பிரப்பு இரீஇ'

(கஎ-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) பல் பிரப்பு | = | பல பிரப்பாக முலைப்பட்டம் |
| இரீஇ | = | எழுதி, |

'சிறு பசு மஞ்சளோடு நறுவிரை தெளித்து'

(கஅ-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) சிறு | = | சிறிய |
| பசு | = | பசுமையுடைத்தான |
| மஞ்சளொடு | = | காட்டு மஞ்சளுடன் |
| நறு | = | நல்ல |
| விரை | = | மும்மலர்களையும் |
| தெளித்து | = | தூவி, |

'பெருந்தண் கணவீரம் நறும் தண் மாலை

துணை உற அறுத்து தூங்க நாற்றி'

(கக, உ௦-வது வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) பெருந்தண் | = | பெரிய குளிர்ச்சியினுடைய |
| கணவீரம் | = | செவ்வலரிப்பூ |
| நறும் | = | நறுவிய |
| தண் | = | தட்பம் பொருந்திய |
| மாலை | = | மாலையை |
| துணை உற | = | இணையொக்க |
| அறுத்து | = | நறுக்கி |
| தூங்க | = | அசைதர |
| நாற்றி | = | பூங்கோயிலாகத் தூக்கி |

'நளி மலை சிலம்பின் நல் நகர் வாழ்த்தி'

(உக வதுவரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) நளிமலை | = | குளிர்ச்சியுடைத்தா யிருந்துள்ள |
| சிலம்பின் | = | மலையிடத்து |
| நல் நகர் | = | நல்ல ஊர்களை |
| வாழ்த்தி | = | வாழ்த்தி, |

'நறும் புகை எடுத்து குறிஞ்சி பாடி'
(உஉ-வது வரி)

(ப-ரை) நறும் = நறு காற்றத்தையுடைய
புகை = தூபத்தை
எடுத்து = எழுப்பி
குறிஞ்சி = அந்நிலத்திற்குரியகுறிஞ்சி யென்கின்ற பண்ணை
பாடி = பாடி,

'இமிழ் இசை அருவியோடு இன் இயம் கறங்க'
(உங-வது வரி)

(ப-ரை) இமிழ் இசை = மலையினின்று விழுகின்ற மெத்தென்ற
அருவியோடு = அருவி யோசையுடனே
இன் இயம் = இனிதாக வாச்சியங்கள்
கறங்க = முழங்க,

'உருவப் பல் பூ தூ உய்'
(உச-வது வரி)

(ப-ரை) உருவப் பல்பூ = பல நிறங்களையுடைய பூக்களை
தூஉய் = சிதறி

வெருவர, குருதி செம்தினை பரப்பி,
(உச-உரு-வது வரி)

(ப-ரை) வெருவர = கண்டார் திடுக்கிட
குருதி = உதிரம் போன்ற
செம்தினை = செந்தினைகளை
பரப்பி = பரப்பி,

குறமகள், முருகு இயம் நிறுத்து'

(உரு, உசு வரிகள்)

(ப-ரை) குறமகள் = குறமகளிர்
முருகு இயம் = முருகனுக்குடைமையாகிய முருகியமென்ற துடியையு
நிறுத்து = கொட்டி,

(வி-ரை) முருகியம்-தொண்டகப்பறையெனினுமமையும்

'முரணினர் உட்க,
முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு வியன் நகர்,
(உசு, உஎ-வரிகள்)

(ப-ரை) முரணினர் = தங்களுடன்மாறுபட்டோர்
உட்க = அஞ்சும்படி
முருகு = பிள்ளையாரை
ஆற்றுப்படுத்த = தங்கள் வழிப்படுத்தின
உரு கெழு = அழகமைந்துள்ள
வியன் = பெருமையாகிய
நகர் = ஊர்களிலே,

'ஆடுகளம் சிலம்பப் பாடி'
(உஅ வது வரி)

(ப-ரை) ஆடு களம் = வெறியாட்டாளர்கள்
சிலம்ப = ஆரவாரிக்க
பாடி = பாடி,

'பலவுடன், கோடுவாய் வைத்து'
(உஅ, உகூ-வரிகள்)

(ப-ரை) பலவுடன் = பல முழக்கத்துடனே
கோடு = கொம்பு
வாய் வைத்து = குறித்து,

(வி-ரை) பல முழக்கத்துடனே சங்கு குறித்ததெனினு மமையும்.

'கோடு மணி இயக்கி'

(உகூ-வது வரி)

(ப-ரை) கொடு மணி = ஓசைமிக்கமணிகளையும்
இயக்கி = எறிந்து,

'ஓடா பூட்டகை பிணி முகம் வாழ்த்தி'

(௩௦-வது வரி)

(ப-ரை) ஓடா = கெடாத
பூட்கை = வலிமை படைத்த
பிணிமுகம் = பிணிமுக மென்னும் பெயருடைய யானையை
வாழ்த்தி = பரவி,

(வி-ரை) 'பிணிமுகம்' என்பது பிள்ளையார் பவனிவரும் யானையின் பெயர் ; இதனைச்

"சேயுயர் பிணிமுக மூர்ந்த"

எனப் பரிபாடலினும்,

"பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய"

எனக் கல்லாடத்துங் கூறலானு மறிக. பிணிமுகம் மயிலென்பாருமுளர்.

'வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட'

(௩க-வது வரி)

(ப-ரை) வேண்டுநர் = வேண்டினோர்
வேண்டியாங்கு = வேண்டின வரங்களை
எய்தினர் = பெறவேண்டு மென்று
வழிபட = வழிபட,

'ஆண்டு ஆண்டு உறைதலும் அறிந்தவாறே'

(௩௨-வது வரி)

(ப-ரை) ஆண்டு ஆண்டு = முதற் கூறப்பட்ட அவ்வவ் விடங்களிலே

உறைதலும் = தங்குதலும்

அறிந்தவாறே = அறிந்தவாறே;

'ஆண்டு ஆண்டு என்பது முதல் 'அளவையில்' என்பது வரையில் ஒரு தொடர்

(௩௩-௩௪-வரிகள்)

'ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக காண் தக
முந்து நீ கண்டுழி முகன் அமர்ந்து ஏத்தி'

(௩௩-௩௪ வரிகள்)

(ப-ரை) ஆண்டு ஆண்டு ஆயினும் = அங்கங்கேயாயினும்

ஆக காண் தக = ஆகிக் கண்டவிடத்திலே

முந்து = முற்பட

நீ கண்டுழி = நீ கண்டவிடத்தே

முகன் அமர்ந்து = முகமலர்ந்து

ஏத்தி = வாழ்த்தி,

'கை தொழூஉ பரவி, கால் உற வணங்கி,

(௩௫-வது வரி)

(ப-ரை) கை தொழூஉ = கை கூப்பி

பரவி = துதித்து,

கால் உற = சீபாதத்திலே விழைவுற்று

வணங்கி = வணங்கி,

நெடும் பெரும் சிமயத்து நீல பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ,

ரு௫, ரு௮-வரிகள்

(ப-ரை) நெடும் = ஓங்கிய
பெரும் = பெரிய
சிமயத்து = மரையகத்து
நீலம் = நீலோற்பல முதலாயுள்ள பூக்கள் மிடைந்து கிடக்கின்ற
பைஞ்சுனை = சரவணப் பொய்கையில்
ஐவருள் ஒருவன்... பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னப்பட்ட பஞ்ச பூதங்களி லொருவனு கிய அனற் கடவுள்
அம் கை = அழகிய கையை
ஏற்ப = ஏற்ப
அறுவர் = அருந்ததி யொழிந்த அறுவ ராலும்
பயந்த = பெறப்பட்ட
ஆறு அமர் = நெறியின் அமர்ந்த
செல்வ = செல்வனே!

(வி-ரை) "இமயம் பூத்த சுனைமான் டொட்டி" என்றார் கல்லாடரும்.

எனவே, ஓங்கிய விமயவரையகத்து நீலோற்பல முதலா யுள்ள பூக்கள் மிடைந்து கிடக்கின்ற சரவணப் பொய்கை யிலே பஞ்சபூதத் தொருவனுகிய அனற்கடவு ளழகிய கை

யை யேற்ப, அருந்ததி யொழிந்த அறுவராலும் பெறப் பட்ட நெறியமர்ந்த செல்வனே!

'அறுவர் பயந்த' என்றதற்குக் 'கார்த்திகை முதலா யுள்ள அறுவரு முலை கொடுத்து வளர்த்தவனே' எனினு மமையும்.

'நீலம்' என்றதை ஈண்டு ஆகுபெயராகக் கொண்டு 'தருப்பை' எனினுமாம். இதனை,

"பாயிரும் பனிக்கடல்"

என்னும் பரிபாடலானுமறிக.

'ஆல் கெழு கடவுள் புதல்வ'!

(௩௯-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | ஆல் கெழு | = | ஆலின் கீழே பொருந்திய |
| | கடவுள் | = | இறைவன் |
| | புதல்வ | = | குமாரனே! |

'மால்வரை, மலைமகள் மகனே!'

(௩௯, ௪௦-வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | மால் | = | மால்போலும் |
| | வரை | = | வரையினையுடைய |
| | மலைமகள் | = | மலையரையின் றிருமகளார் |
| | மகனே | = | மகனே! |

'மாற்றோர் கூற்றே'!

(௪௦-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | மாற்றோர் | = | சேரலர்க்கு |
| | கூற்றே | = | கூற்றுவனே! |

'வெற்றி வேல் போர் கொற்றவை சிறுவ!

(சுச-வது வரி)

(ப-ரை) வெற்றி = வெற்றியுடைத்தான
வேல் போர் = வேற்போர்க்குரிய
கொற்றவை = துர்க்கையினுடைய
சிறுவ = புதல்வனே!

(வி-ரை) ['வெல்போர்' என்றும் பாடமுண்டு.] "வென்ற வெற்றிப் போருக்குத் தெய்வமான செயமகளார் புதல்வனே" எனினுமமையும்; இது மகிடனைச் செற்றமை யுணர்த்திற்று.

'இழை அணி சிறப்பின் பழையோள் குழவி'!

(சுஉ-வது வரி)

(ப-ரை) இழை அணி = பூணணிந்த
சிறப்பின் = சிறப்பினுடைய
பழையோன் = காடுகாள்
குழவி = மகனே!

(வி-ரை) இதுவன்றிப் 'பூமாதேவிக்குப் பிள்ளை' என்பாருமுளர்.

'வானோர் வணங்கு வில் தானை தலைவ'!

(சுங-வது வரி)

(ப-ரை) வானோர் = தேவர்களால்
வணங்கு = வணங்கப்படும்
வில் தானை தலைவ = சேனைபதியாயுள்ளானே!

(வி-ரை) இது "தேவர் சேனாதிபதி" என்னும் பெயர் பற்றிக் கூறினதெனினு மமையும்.

'மாலை மார்ப! நூல் அறி புலவ'!

(சச-வது வரி)

(ப-ரை) மாலை = மாலை யணிந்த
மார்ப = திருமார்பனே!
நூல் அறி = வேதாகமங்கள் முதலிய பல சாத்திரங்களையு மோதா துணர்த்தும்
புலவ = பண்டிதனே!

'செருவில் ஒருவ! பொரு விறல் மள்ள!'

(சரு-வது வரி)

(ப-ரை) செருவில் ஒருவ = போருக்கொருவனே!
பொரு = வீராயிருப்போர்க்கு
விறல் மள்ள = வீரனுயுள்ளவனே!

'அந்தணர் வெறுக்கை'!

(சசு-வது வரி)

(ப-ரை) அந்தணர் = அந்தணர்க்கு
வெறுக்கை = திரவியமே!

'அறிந்தோர் சொல் மலை'!

(சசு-வது வரி)

(ப-ரை) அறிந்தோர் = அறிந்தோராலே சொலலப் பட்ட
சொல் மலை = சொல்லுக்கு மிகுதியாயுள்ள வனே!

'மங்கையர் கணவ'

(௭௭-வது வரி)

(ப-ரை) மங்கையர் = மங்கைய ரிருவர்க்கும்
கணவ = கணவனே!

(வி-ரை) மங்கையர்: வள்ளி நாயகியார், தெய்வயானையா ரென்க.

'மைந்தர் ஏறே!'

(௭௭-வது வரி)

(ப-ரை) மைந்தர் = வீரர்க்கு
ஏறே = ஏறுயுள்ளவனே!

(வி-ரை) [ஏறு-இடபம். மைந்தர்-வலிமை யுடையார்.]

'வேல் கெழு தடம் கை சால் பெரும் செல்வ!'

(ப-ரை) வேல் கெழு = வேல் ஏந்திய
தடம் கை = பெரிய கையினையுடைய
சால் = மிகுதிப்பட்ட
பெரும் செல்வ = பெருஞ் செல்வனே!

'குன்றம் கொன்ற குன்று கொற்றத்து
விண் பொரு நெடு வரை குறிஞ்சி கிழவ!'

(௭௬-௨௦-வரிகள்)

(ப-ரை) குன்றம் = குருகு பெயர் புனைந்த மலையை
கொன்ற = பிளந்த
குன்று = குறையாத
கொற்றத்து = வெற்றியினையுடைய,

(வி-ரை) இதனைப் "புள்ளியற் பொருப்பும்" என்றதனுமுணர்க.

| | | |
|---|---|---|
| விண் பொரு | = | ஆகாயத்தைத் தொடுவது போன்ற |
| நெடு வரை | = | உயர்ந்த மூங்கி லடர்ந்த |
| குறிஞ்சி | = | குறிஞ்சி நிலத்துக்கு |
| கிழவ | = | தலைவனே! |

(வி-ரை) "சேயோன் மெய்வரை யுலகமும்" என்ற திப் பெற்றி நோக்கி.

பலர் புகழ் நல் மொழி புலவர் ஏறே!'

(நக-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | பலர் புகழ் | = | பக்தர்களா லேத்தப்பட்ட |
| | நல் தொழி | = | நல்ல சொற்களையுடைய |
| | புலவர் | = | புலவர்க்கு |
| | ஏறே | = | ஏறுயுள்ளவனே! |

அரும் பேறல் மரபின் பெரும் பேயர் முருக!'

(நஉ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | பெறல் அரும் | = | பெறுதற்குரிய |
| | மரபின் | = | முறைமையினுடைய |
| | பெரும் பெயர் முருக | = | முருகனென்னும் பெரும் பெயரினையுடையவனே! |

'நசையினர்க்கு ஆர்த்தும் இசை பேர் ஆள!'
(நங-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | நசையினர்க்கு | = | நச்சிவந்தார்க்கு |
| | ஆர்த்தும் | = | ஒன்றனை அதனை நுகர்விக்கும் |

இசை = புகழினையுடைய
பேர் ஆள = பேராளனே!

'அலந்தோர்க்கு அளிக்கும் பொலம் பூண் சேஎய்'!

(ருச-வது வரி)

(ப-ரை) அலந்தோர்க்கு = தரித்திரராயுள்ளோர்க்கு
அளிக்கும் = அருளும்
பொலம் பூண் = பொற் பூணையுடைய
சேஎய் = சேயே!

'மண்டு அமர் கடந்த நின் வென்று ஆடு அகலத்து!'

(ருரு-வது வரி)

(ப-ரை) மண்டு = மண்டின
அமர் கடந்த = போரினை வென்ற
நின் = உம்முடைய
வென்று ஆடு = வெற்றியினையுடைய
அகலத்த = மார்பனே!

'பரிசிலர் தாங்கும் உரு கெழு நெடுவேல்'!

(ருசு-வது வரி)

(ப-ரை) பரிசிலர் = இரப்போரை
தாங்கும் = திருக்கைகளாலே தாங்குகின்ற
உருகெழு = அழகிய
நெடுவேள் = தவமிக்கவனே!

'பெரியோர் ஏத்தும் பெரும் பெயர் இயவுள்'!

(ருஎ-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) பெரியோர் | = | உயர்ந்தோரால் |
| ஏத்தும் | = | ஏத்தப்பட்ட |
| பெரும் பெயர் | = | பெரிய நாமத்தையுடைய |
| இயவுள் | = | கடவுள்! |

'சூர் மருங்கு அறுத்த மோய்ம்பின் மதவலி!'

(ருஅ-வது வரி)

| | | |
|---|---|---|
| (ப-ரை) சூர் | = | சூரபன்மனை |
| மருங்கு | = | சுற்றக் குழாத்துடனே |
| அறுத்த | = | வேரறுத்த |
| மொய்ம்பின் | = | வலியையும் |
| மதவலி | = | உறுதியையு முடையானே! |

'போர் மிகு பொருந! குரிசிலும் எனப் பல
யான் அறி அளவையின் ஏத்தி'

(ருகூ-சுO வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) போர் | = | போரை |
| மிகு பொருந | = | மிகப்பொர வல்லவனே! |
| குரிசில் | = | தலைவனே! |
| எனப் பல | = | எனவும் பலவாக |
| யான் அறி | = | என்னுலறிந்த |
| அளவையின் | = | எல்லைகளிலே |
| ஏத்தி | = | வாழ்த்தி; |

' ஆறுது,
நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின் '

(௬௦, ௬௧-வரிகள்)

(ப-ரை) ஆறுது = அமையாது
நின் = நின் பெருமையை
அளந்து அறிதல் = அளந்தறிதல்
மன் = உலகங்களிலே மன்னப்பட்ட
உயிர்க்கு = உயிர்களுக்கு
அருமையின் = அருமையாதலாலே,

' நின் அடி உன்னி வந்தனன் '

(௬௨-வது வரி)

(ப-ரை) நின் அடி = நின்னுடைய திருவடியை
உன்னி = நினைந்து
வந்தனன் = வந்தேன்.

' நின்னொடு,
புரைநர் இல்லா புலமையோய் என '

(௬௨, ௬௩ வரிகள்)

(ப-ரை) நின்னொடு = நின்னோடு
புரைநர் = ஒப்பவர்
இல்லா = இல்லாத
புலமையோய் = புலமையுடையோய்!
என = என்று,

(வி-ரை) [' புரையுநர் ' என்றும் பாடமுண்டு]

'குறித்தது மொழியா அளவையின்'

(௬௪-வது வரி)

(ப-ரை) குறித்தது = நினைத்தது
மொழியா = மொழிவதற்கு
அளவையில் = முன்னர்

'குறித்து' என்பது முதல் 'ஏத்தி' என்பது வரையில் ஒரு தொடர்.

(௬௪, ௬௫-வரிகள்)

'குறித்துடன்'
வேறு பல் உருவின் குறும் பல் கூளியர்'

(௬௪, ௬௫-வரிகள்)

(ப-ரை) குறித்துடன் = குறித்துக்கொண்டு (நினைத்த காரிய மின்னதென் றறிந்து)
வேறு = வேறுபட்ட
பல் உருவின் = பல உருவினையுடையவாய்,
குறும் = குறியவாயிருப்பன
பல் கூளியர் = பல பூதங்கள்.

(வி-ரை) "கூளிகள் என்று பேய்க்கும் பெயராம்.

'சாறு அயர் களத்து வீறு பெற தோன்றி'

(௬௬-வது வரி)

(ப-ரை) சாறு அயர் களத்து = விழாக்களத்தில்
வீறு பெற = வீறுண்டாக
தோன்றி = தோன்றி.

'அளியன் தானே முது வாய் இரவலன்
வந்தோன் பெரும! நின் வள் புகழ் நயந்து என
இனியவும் நல்லவும் நனி பல ஏத்தி!

(௲௭-௲௲-வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) அளியன் தானே | = | நீ யனுக்கிரகிக்கத் தக்கவன்றானே |
| முதுவாய் | = | நிரம்ப ஓதிய |
| இரவன் | = | புலவன் |
| பெரும | = | பெருமானே! |
| நின் | = | நினது |
| வள் புகழ் | = | வளவிய புகழை |
| நயந்து | = | விரும்பி |
| இனியவும் | = | கேட்பார்க்கினிதாகவும் |
| நல்லவும் | = | பயனுண்டாகவும் |
| நனிபல | = | வரு நன்மை பலவும் |
| ஏத்தி | = | சொல்லி மிக வாழ்த்தி |
| வந்தோன் என | = | வந்தானென்று கூற |

'தெய்வம்' என்பது முதல் 'நல்குமதி'
என்பது வரையில் ஒரு தொடர்.

(௭௦, ௭அ-வரிகள்)

'தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்
வான் தோய் நிவப்பின் தான் வந்து எய்தி'

(௭௦, ௭௧-வரிகள்)

| | | |
|---|---|---|
| (ப-ரை) தெய்வம் | = | தெய்வத்தன்மை |
| சான்ற | = | அமைந்த |

| | | |
|---|---|---|
| திறல் விளங்கு | = | வலி விளங்கப்பட்ட |
| உருவின் | = | வடிவினையும் |
| வான் | = | வானிலே |
| தோய் | = | தோன்றப்படுகின்ற |
| நிவப்பின் | = | ஒழுக்கத்தினையுமுடைய |
| தான்வந்து எய்தி | = | பிள்ளையாரும் முன்புகிட்டி வந்து, |

'அணங்கு சால் உயர் நிலை தழீஇ'

(எஉ-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | அணங்கு | = | தெய்வத் தொழில் |
| | சால் | = | அமைந்து |
| | உயர் நிலை | = | மிக்குயர்ந்தநிலை |
| | தழீஇ | = | தன்னிடத்தே யடக்கிக் கொண்டு, |

'பண்டை தன்
மணம் கமழ் தெய்வத்து இள நலம் காட்டி'

(எஉ, எரு-வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | பண்டை தன் | = | பண்டைத் தனது |
| | மணம் கமழ் | = | மணம் கமழ்கின்ற |
| | தெய்வத்து | = | முருகனாகிய தனது |
| | இளநலம் காட்டி | = | தெய்வ நலத்தைக் காட்டி |

(வி-ரை) தெய்வத்தன்மை யடக்கி மக்களியாக்கையுடை தெய்வ யாக்கையைக் கண்டால் நடுங்குவாராதலால் மக்கள் யாக்கையைக் கொண்டு இளையனைத் தோன்றி,

'அஞ்சல் ஓம்பு மதி அறிவன் நின் வரவு என'

(எச-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | அஞ்சல் | = | அஞ்ஞாதை! |
| | ஓம்பும் | = | ஒப்பம் பெற்று |
| | மதி | = | (அசை நிலை) |
| | அறிவன் | = | அறிந்தேன் |
| | நின் வரவு என | = | நீ கருதி வந்த பொருளெனத் திருவுள்ளமாய் |

'அன்புடை நல் மொழி அளைஇ'

(எரு-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | அன்புடை | = | அன்புடனே |
| | நல் மொழி | = | நல்ல பொருள்களை |
| | அளைஇ | = | அவனுடனே கலந்து பேசி |

(வி-ரை) அன்புடனே நல்ல மொழியாலே யவனுடனே யளவளாயின வெனினு மமையும்.

'விளிவு இன்று
இருள் நிற முன்னீர் வளைஇய உலகத்து
ஒரு நீ ஆகத் தோன்ற'

(எரு, எஎ-வது வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | விளிவு இன்று | = | கேடு இன்றி இருந்த |
| | இருள் நிற | = | கரிய நிறத்தினையுடைய. |
| | முன்னீர் | = | முதுநீர் |
| | வளைஇய | = | சூழ்ந்த |
| | உலகத்து | = | பூமிக்கு |
| | ஒரு நீ ஆக | = | நீ ஒருவனே தலைவனாக |
| | தோன்ற | = | காணும்படி |

விழுமிய
பெறலரும் பரிசில் நல்கும் மதி பலவுடன்

(என, எஅ-வது வரிகள்)

(ப-ரை) மதி பலவுடன் = அறிவுகள் பலவுடனே
விழுமிய = மேம்பட்ட
பெறல் அரும் = பெறுதற்கு அரிய
பரிசில் = பரிசில்களை
நல்கும் = அளித்தருளுவன்

"வேறு பஃறுகிலின்" என்பது முதல் "மலைகிழவோனே" என்பது வரையில் ஒரு தொடர்.

"வேறு பல் துகிலின் நுடங்கி"

(எசுஉ-வது வரி)

(ப-ரை) வேறுபல் = வேறுபட உடுத்த
துகிலின் நுடங்கி = துகிலின் நுடங்கல் போன்று

'அகில் சுமந்து'

(எசுஉ-வது வரி)

(ப-ரை) அகில் = அகில் மரத்தை
சுமந்து = எடுத்துக்கொண்டு

"ஆரமுழு முதலு ருட்டி வேரற"

(அ0-வது வரி)

(ப-ரை) வேர் அற = வேரோடே
ஆரம்முழு முதல் = சந்தன மரங்களை
உருட்டி = எடுத்து உருட்டி

"பூவுடையலங்கு சுனை புலம்பு வேர் கீண்டு"

(அக வது வரி)

(ப-ரை) பூவுடை = அழகிய நீலோற்பலம் முதலாகிய பூக்களும்

அலங்கு = மிடைந்து கிடக்கின்ற

சுனை = சுனைகளின் மரங்களெல்லாம்

புலம்புவேர்கீண்டு = வேர் கிழித்துக்கொண்டு

"விண் பொரு நெடுவரை பருதியிற் றொடுத்த
தண்கமழ் மலரிறால் சிதைய"

(அஉ-அங-வது வரிகள்)

(ப-ரை) விண் = ஆகாயத்தைத்

பொரு = தொடுவது போன்றிருந்துள்ள

நெடுவரை = பெரிய மலைகளில்

பருதியின் = ஆதித்தன்தோன்றினாற்போலக்

தொடுத்த = வைத்த

தண் = குளிர்ச்சியையும்

கமழ் = நறு நாற்றத்தையும் உடைய

மலரிறால் = தேன் கூடுகள் எல்லாம்

சிதைய = அழிய

'நன்பல
ஆசினி முதுசுளை கலாவ'

(அங-அச-வது வரிகள்)

(ப-ரை) நன்பலவு = நல்ல பலாவின்

ஆசு இல் = குற்றமற்ற

| | | |
|---|---|---|
| முதுசுளை | = | சுளையும் |
| கலாவ | = | விரவிக்கொண்டு |

'மீமிசை
நாக நறுமலர் உதிர'

(அச-அரு-வது வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | மீமிசை | = | மேன்மேலே |
| | நாகம் | = | புன்னையினுடைய |
| | நறுமலர் | = | நறுவிய மலர்களை |
| | உதிர | = | உதிர |
| (வி-ரை) | மீமிசை | = | ஒரு பொருட் பன்மொழி |

'யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்ப'

(அரு, அசு-வது வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | யூகமொடு | = | கருங்குரங்குகளுடனே |
| | மாமுக | = | பெரிய முகத்தினையுமுடைய |
| | முசுக்கலை | = | முசுக்களும் கலைகளும் |
| | பனிப்ப | = | தளர |

'பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசி'

(அசு-அள-வது வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | பூ | = | பொலிவு பெற்ற |
| | நுதல் | = | மத்தகத்தையுடைய |
| | இரும்பிடி | = | பிடிகள் |

குளிர்ப்ப = உள்ளம் குளிரும்படி
வீசி = தள்ளி

'பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத்'
தத்துற்று

(அஎ-அகூ-வது வரிகள்)

(ப-ரை) பெருங்களிற்று = பெரிய கடா யானைகளின்
முத்து உடை = முத்துச் சொரியும்
வான்கோடு = கோடுகளையும்
தழீஇ = அணைத்துக்கொண்டு
தத்துற்று = குதிபாய்ந்து

"நன்பொன் மணிநிறம் கிளர"

(அகூ-வது வரி)

(ப-ரை) நன் = நல்ல
பொன் = பொன்னும்
மணி = மாணிக்கமும்
நிறம் கிளர = ஒக்க ஒளி எழ

"பொன் கிழியா"
(அகூ-வது வரி)

(ப-ரை) பொன் = பொன்னை
கிழியா = கிழித்து

'வாழை முழுமுதல் துமிய'

(கூ0-வது வரி)

(ப-ரை) வாழை = வாழைகளை

| | | |
|---|---|---|
| முழுமுதல் | = | வேருடனே |
| துமிய | = | முறித்து |

'தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கி'

(௬௦-௬௧-வது வரிகள்)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | தாழை | = | தென்ன மரங்களின் |
| | இளநீர் | = | நல்ல இளநீரின் |
| | விழுகுலை | = | சிறந்த குலை |
| | உதிரத்தாக்கி | = | உதிரச்சாடி |

"கறிக் கொடிக் கருந்துணர் சாய"

(௬௨-வது வரி)

| | | | |
|---|---|---|---|
| (ப-ரை) | கறிக்கொடி | = | மிளகு கொடிகள் |
| | கருந்துணர் | = | பூ உடனே |
| | சாய | = | சரிய |

"பொறிப்புறப்
மடம் நடை மஞ்ஞை பலவுடன்"

(௬௨-௬௩-வது வரிகள்)

நேரிசை வெண்பா.

| | | | |
|---|---|---|---|
| (பீ-ரை) | பொறிபுறம் | = | பல வரிகளையும் |
| | மடம் | = | மடப்பத்தினையும் |
| | நடை | = | நடையினையுமுடைய |
| | மஞ்ஞை | = | மயில்கள் |
| | பலவுடன் | = | பலவுடன் |

" வேரீஇக்
கோழி வயம் பெடை இரிய"

(சா௱-சாச-வது வரிகள்)

(ப-ரை) கோழி = கோழியின்
வயப்பெடை = வலிமையுடைய பெடைகளும்
வெரீஇ இரிய = ஓட

'கேழலோடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉ மயிர் யாக்கை குடாஅடி உளியம்
பெருங்கல் விடர் அளை செறிய'

(கூச-கூஎ-வது வரிகள்)

(ப-ரை) கேழலொடு = ஆண் பன்றியுடனே
இரும்பனை வெளிற்றின் = பெரிய இளம் பனையின்
புன்சாய் அன்ன = வலிய செறும்பு போன்ற
குரூஉ மயிர் = கருநிற மயிரினையுடைய
யாக்கை = உடம்பினையும்
குடா அடி = குடமுழவுபோன்ற அடியினையும்உடைய.
உளியம் = கரடி
பெருங்கல் = பெருங்கல்
விடர் அளை = விண்ட முழையில்
செறிய = சேர

"கரும் கோட்டு
ஆமா நல் ஏறு சிலைப்ப"

(சுஎ-சுஅ-வது வரிகள்)

(ப-ரை) கரும் கோட்டு = கரிய கொம்பினையுடைய
ஆமா = ஆமாவினுடைய
நல் ஏறு = நன்றாகிய ஏறுகள்
சிலைப்ப = முழங்க

"சேண் நின்று
இழும் என இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழவோனே"

(சுஅ-க00-வது வரி)

சேண் நின்று = மலையின் உச்சியின் நின்று
இழும் என = இழும் என்னும் ஓசை யுடன்
இழிதரும் = குதித்துவரும்
அருவி = அருவி ஆற்றையுடைய
பழமுதிர் = பழமுதிரும்
சோலை மலை = சோலைமலைக்கு
கிழவோனே = உரிமை உடையோனே

(எ-று)

(வி-ரை) "முருகாற்றுப்படை" என்பதற்குச் சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாய அந்தமில் இன்பத்து அழிவில்வீடு பெறுவான். சமைந்தான் ஓர் இரவலனை அவ்வாறு வீடு பெற்றான், ஒருவன், முருகனுழை ஆற்றுப் படுத்தல், எனப் பொருள் விரிக்க.

நேரிசை வெண்பா.

அரிமே லழகுறூஉ மன்பமை நெஞ்சப்
பரிமே லழகன் பகர்ந்தான் - விரிவுரைமு
தக்கீரிஞ் ஞான்று தனிமுருகாற் றுப்படையா
நக்கீர னல்ல கவிக்கு

திருமுருகாற்றுப் படைக்கு உரையாளர் பரிமேலழகர்
உரை முற்றிற்று.

---

பழமுதிர்சோலைப் சிறப்பு :—ஊர்தோறும் நடக்கும் திருவிழாக்களினும், தம்மீது அன்புடையவர் துதித்தலால் தமது திருவுளம் விரும்பிய இடத்தினும், வெறியாடுகளத்தினும், காட்டினும், சோலையினும், ஆற்றிடைக்குறையினும், ஆறுகளினும், குளங்களினும், வேறு பல ஊர்களினும், முச்சந்தி—நாற்சந்தி—ஐச்சந்திகளினும், ஊர்க்கு நடுவே எல்லாருமிருக்கும் மரத்தடியினும், அம்பலத்தினும், ஆதிண்டு குற்றியுடைய இடத்தினும் உறைதலும் உரியர்; குறமகள் வழிபட நகரிலே உறைதலும் உரியர்; இதனை யான் கண்டவாறு சொன்னேன். இந்தத் தலங்களிலாயினும் வேறெந்தவிடங்களிலாயினும் அவரை நீ கண்டபோது முன்பு தலைமேலே கையைவைத்து வாழ்த்தி, பிறகு அவர் திருவடியுன் தலையிலுறத் தண்டனிட்டு, பலவாறாகத் துதித்துப் புகழ்ந்து, நின்னடி சேரவந்தேனென்று விண்ணப்பஞ்செய்ய நீ விரும்பிய வீடுபேற்றைத் தருவர் பழமுதிர்சோலைக் குரிமையை யுடையவர் என்பதாம்.

இந்தத் தலத்தில், ஒரே பீடத்தில் மூலவர் இரண்டு தேவிமாருடனே நின்ற திருக்கோலமா யிருக்கின்றனர்;

இவ்வாறிருப்பது ஸ்ரீ சுப்பிரமணியர் தலங்களிலன்றி வேறெந்த க்ஷேத்திரத்திலு மில்லையாம்.

இத்தலத்துக்குக் காவற்காரர் ஸ்ரீ முருகவேளின் படைத்தலைவராகிய வீரவாகுதேவராவர்.

இந்தக் கோயிலின் முகத்துவாரத்தில் பதினெட்டாம்படி கருப்பண்ண சுவாமி கோயிலிருக்கின்றது.

திருமுருகாற்றுப்படை மூலமும் பரிமேலழகர் உரையும் முற்றுப்பெற்றன.

---

உ

முருகன் துணை

# தோத்திரப்பாக்கள் மூலமும்,

ஏ இலக்கண இலக்கிய தருக்க, வேதாந்த போதகாசிரியரும், சென்னை ஹிந்து தியாலாஜிகல் உயர்தரக் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் புலவருமான

[ஆசிரியர் சாது. கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் இயற்றிய உரையும்]

நேரிசை வெண்பா.

குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர் தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையா-யென்று
மிளையா யழகியா யேறூர்ந்தானேறே
யுளையாயென் னுள்ளத் துறை.

-ரை) குன்றம் = (கிரவுஞ்சகிரி யென்னும்) மலையை

எறிந்தாய் = (வேற்படையை யேவிப்) பிளந்தவனே!

குரை கடலில் = சப்திக்கின்ற கடலிலே.

சூர் தடிந்தாய் = மாமரவடிவங்கொண்டுநின்ற சூரபதுமனை யழித்தவனே!

புன் தலைய = சிறிய தலைகளையுடைய

பொரு = போர் செய்தற்குரிய

பூதப்படையாய் = பூதப்படைகளையுடைய வனே!
என்றும் = எஞ்ஞான்றும்
இளையாய் = இளமைப் பருவமுடையவனே!
அழகியாய் = கட்டழகுடையவனே!
ஏறு ஊர்ந்தான் = இடப வாகனத்தை ஏறி நடாத்தும் சிவபெருமானது
ஏறே = புத்திரனே!
உளையாய் = அழிதலில்லாதவனே!
என் உள்ளத்து = (நீ) என் மனத்தாமரை மலரினிடத்து
உறை = எழுந்தருளி யிருக்கக்கடவாய்'

வி-ரை) 'இளையாய்' என்பதற்குப் (போரில் எஞ்ஞான்றும்) இளைத்தலில்லாதவனே என்றும், 'உளையாய்! என்பதற்கு (எஞ்ஞான்றும்) வருத்தலில்லாதவனே என்றும் பொருள் கொள்ளலாம். ஏறு—ஆண் மகன்.

2. குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரடர் தீர்த்ததுவு—மின்றென்னைக்
கைவிடா நின்றதுவு கற்போதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல்.

ப-ரை) குன்றம் எறிந்ததுவும் = கிரவுஞ்சகிரியைப் பிளந்தழித்ததும்
குன்ற = பகையசுரர்மாளும்படி

போர் செய்ததுவும் = (போர்க்களத்தில்) யுத்தஞ் செய்ததும்,
அன்று = (சூரபதுமன் வருத்திய) அக்காலத்திலே
அங்கு = அவ் வீரமாமயேந்திர புரியில்
அமரர் = (சயந்தன் முதலிய) தேவர்களது
இடர் தீர்த்ததுவும் = துன்பத்தையொழித்ததும்,
இன்று = இப்போது
என்னை = (அடியவனுகிய) என்னை
கைவிடா நின்றதுவும் = கைசோரவிடாமல் நின்று பாதுகாப்பதும்,
கல் பொதும்பில் = மலைக் குகையில் [அரக்கனுல் அடைக்கப்பட்டிருந்தவரை]
காத்ததுவும் = இரட்சித்ததும் (எதுவென்ருலோ அது)
மெய்விடா = (என்ஞான்றும் தனது) உண்மை வடிவத்தை விடாதுள்ள
வீரன் = வீரனுகிய முருகப் பிரானது
கை = திருக்கரத்தில்(உள்ள)
வேல் = வேற்படையேயாம்

3. வீரவே ருரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே டிருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
துளைத்தவே லுண்டே துணை.

(ப-ரை) வீரவேல் = வீரத்தன்மையமைந்த வேலும்,
தாரை வேல் = கூர்மையமைந்த வேலும்,
விண்ணோர் = தேவர்களை
சிறைமீட்ட = காவற்கூடத்தினின்றும் மீளச்செய்த
தீரவேல் = வலிமை பொருந்தியவேலும்,
வாரி = கடலில்,
குளித்த வேல் = (பகையசுரரை யழித்த போது) மூழ்கிவந்த வேலும்,
கொற்ற வேல் = வெற்றியமைந்த வேலும்,
சூர் மார்பும் = சூரபதுமனது மார்பையும்
குன்றும் = கிரவுஞ்ச கிரியையும்
துளைத்த வேல் = துளைத்துப் பிளந்த வேலும், (ஆகிய)
செவ்வேள் = செவ்வேளென்னும் முருகப்பிரானது
திருக்கைவேல் = திருக்கரத்தில் (உள்ள) வேற்படையானது
துணை = (எனக்கென்றும்) துணையாக
உண்டு = இருக்கின்றது.

4. இன்னமோருகா லெனதிடும்பைக் குன்றுக்கு முன்னம்
கோன்னவில்வேற் சூர்தடிந்த கோற்றவா—
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

(ப-ரை) கொல் = (பகையசுரரைக்)கொல்லுந் தொழிலை
நவில் = (இயல்பாகவே) கற்றுள்ள
வேல் = வேற்படையால்
சூர் தடிந்த = சூரபதுமனை யழித்த
கொற்றமா = வெற்றியுள்ள இறைவனே
முன்னம் = (நீ) முற்காலத்தில்
பனி வேய் = பனிக்கூட்டமும் மூங்கிற் காடும் (நெருங்கியுள்ள)
நெடுங் குன்றம் = நீண்ட கிரவுஞ்சகிரியின் மீது
பட்டு உருவ = பட்டு (அதனுள்) உருவிச் செல்லும்படி
தொட்ட = பிரயோகித்த
தனிவேலை = (உனது) ஒப்பற்ற வேற் படையை
இன்னம்ஒருகால் = இனிய மொருமுறை
எனது இடும்பைக்குன்றுக்கும் = என்னுடைய துன்பமாகிய மலையைப் பிளந்தழிப்பதற் காகவும்,
வாங்கத்தகும் = பிரயோகஞ் செய்தல் வேண்டும்.

5. உன்னை யொழிய வொருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிரு
கைக்கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தி வாழ்வே.

| | | |
|---|---|---|
| (ப-ரை) | கோல் பன்னிருகை அப்பா | = அழகிய பன்னிரண்டு திருக்கரங்களை யுடைய இறைவனே ! |
| | வானோர் | = தேவர்து |
| | கொடிய வினை | = கொடிய துன்பங்களை |
| | தீர்த்தருளும் | = ஒழித்தருளிய |
| | வேலப்பா | = வேற்படையையுடைய கடவுளே ! |
| | செந்தில் வாழ்வே | = (அன்பரைக்காக்க) திருச்செந்தூரென்னுந் திருப்பதியில்வாழுகின்ற கந்தப்பிரானே |
| | யான் | = (அடியவனாகிய) யான் |
| | உன்னை ஒழிய | = உன்னைத் தவிர |
| | ஒருவரையும் | = வேறொருவரையும் |
| | நம்புகிலேன் | = (தெய்வமென்று) நம்பமாட்டேன் ; |
| | பின்னை ஒருவரையும் | = இனி யொருவரையும் (ஒன்று வேண்டி) |
| | பின் செல்லேன் | = பின்பற்றிச் செல்லமாட்டேன். |

(வி-ரை) 'கோல்' என்பது கோலமென்பதன் விகாரமொழி.

6. அஞ்சு முகந்தோன்றி லாறு முகந்தோன்றும்
வெஞ்சமரி லஞ்சலென வேறேன்று—நெஞ்சி
லொருகா னினைக்கி லிருகாலுந் தோன்று
முருகாவென் றேதுவோர் முன்.

| | | |
|---|---|---|
| (ப-ரை) | முருகா என்று ஓதுவார் முன் | = (அன்போடு) முருகா வெனக் கூறுகின்றவரிடத்து |
| | அஞ்சு முகம் தோன்றில் | = (பகைவர்க்குப்) பயந்து வாடுகின்ற முகந்தோன்றுமாயின் (அவர்களுக்கெதிரே அவர் தம்மைப் பாதுகாத்தருள) |
| | ஆறுமுகம் தோன்றும் | = (முருகப்பிரானது) ஆறு முகங்களும் தோன்றா நிற்கும்; |
| | வெம் சமரில் | = (அப்பகைவர் செய்கை கொடிய யுத்தத்தில் (அன்பர் அச்சமுண்டாமாயின்) |
| | அஞ்சல் என | = (பகைவர்க்கு) அஞ்சாதே என்று (கூறிக்கொண்டு) |
| | வேல் தோன்றும் | = வேற்படை தோன்றாநிற்கும்; |
| | நெஞ்சில் | = (அன்பராயினோர் தம்) மனத்தின் கண் |
| | ஒருகால் நினைக்கின் | = முருகாவென்று கூறி அவனை ஒருமுறை நினைப்பாராயின் |

இருகாலும் தோன்றும் = (அவனது) திருவடி இரண்டும் (அங்கே) தோன்றா நிற்கும்

(விரை) 'வெஞ்சமரந் தோன்றில்' என்றும் பாடமுண்டு. இதற்குப்பொருள் 'கொடிய யுத்தம் தோன்றுமாயின்' என்று கொள்க.

7. முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—யொருகை முகன்
றம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுது
நம்பியே கைதொழுவே நான்.

(ப-ரை) முருகனே = இளமைப் பருவமுடையவனே!
செந்தி முதல்வனே = திருச் செந்தூரென்னுந் திருப்பதியில் வாழு மிறைவனே!
மாயோன் மருகனே = திருமாலின் மருகனே!
ஈசன் மகனே = சிவ சுதனே!
ஒருகை முகன் தம்பியே = ஒரு யானைத் துதிக்கை பொருந்திய திருமுகத்தையுடைய விநாயக மூர்த்தியினது திருத் தம்பியே!
நான் = (அடியவனாகிய) நான்
நின்னுடைய தண்டைக்காலே = உனது தண்டையணிந்த திருவடிகளையே

எப்பொழுதும் = என்றென்றும் நம்பி
கை தொழுவேன் = கைகூப்பி வணங்குகின்றேன்.

(வி-ரை) ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

8. காக்கக் கடவியநீ காவா திருந்தக்கா
லார்க்குப் பரமா மறுமுகவா—பூக்குங்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
விடங்கா ணிரக்கா யினி.

(ப-ரை) ஆறுமுகவா = ஆறு திருமுகங்களை யுடையவனே!
பூக்கும் கடம்பா = மலர்கின்ற கடப்பமலர் மாலையைத் தரித்துள்ளவனே!
முருகா = முருகனே!
கதிர்வேலா = கதிர்விட்டு விளங்குகின்ற வேற்படையை யுடையவனே!
காக்கக்கடவிய நீ = (அன்பரைப்) பாது காக்கக் கடமைப்பட் பட்டுள்ள நீ
காவாது = (இப்போதென்னைப்) பாதுகாக்க விரும்பாது
இருந்தக்கால் = பராமுகமா யிருந்தால், (என்னைப் பாதுகாப்பது)
ஆர்க்குப் பரமாம் = எவர்க்குக் கடமையாம்?

நல்லவிடம் = (என்னை பாதுகாப்ப தற்கு இதுவே) நல்ல சமயமாம்;
காண் = (இதனை) அறியக்கட வாய்;
இனி = இனியாவது
இரங்காய் = (என்மீது) இரக்கஞ் செய்யக் கடவாய்,

9. பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதங்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காத
வாசையா னெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்.

(ப-ரை) நெஞ்சே = மனமே! (நீ)
பரங்குன்றில் = திருப்பரங்குன்றமென் னுந் திருப்பதியின்கண் (அன்பர்க் கருள்செய்ய எழுந்தருளியிருக்கின்ற)
பன்னிருகைக் கோமான்றன் = பன்னிரண்டு திருக்கரங் களையுடைய இறைவனது
பாதம் = திருவடிகளை
கரம் கூப்பி = கைகுவித்து வணங்கி,
கண்குளிரகண்டு = கண்கள் (ஆனந்த பாஷ் யத்தால்) குளிர்ச்சியடை யும்படி தரிசித்து,
சுருங்காத = குறையாத
ஆசையால் = அன்புடனே

அணிமுருகாற்றுப்படையை = திருமுருகாற்றுப் படையென்னும் திவ்வியப் பிரபந்தத்தை

பூசையாககொண்டு = பூசை செய்தற்குரிய பொருளாகக் கொண்டு

புகல் = (நாடோறும் தவறாது) பாராயணம் செய்துவரக் கடவாய்

(வி-ரை) ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது.

10. நற்கீரர் தாமுறைத்த நன் முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும்.

(ப-ரை) நக்கீரர் தாம் உரைத்த = (கடைசங்கப் புலவருள் தலைமை பெற்றிருந்த) நக்கீரரருளிச் செய்த

நன்முருகாற்றுப்படையை = திருமுருகாற்றுப் படையென்னும் சிறந்த நூலை

(ஒருவன்) தற்கோல = தன் மனதை யொருமுகமாக்க

நாடோறும் சாற்றினால் = தினந்தோறும் பாராயணஞ்செய்து வருவானாயின்

முன்கோலம் மா = முதன்மை வாய்ந்த அழகும் பெருமையுமுடைய முருகப்பிரான்

| | | |
|---|---|---|
| வந்து | = | (அவன் முன்) வந்து தோன்றி |
| மனக்கவலை | = | (அவனது) சித்தக் கலக்கத்தை |
| தீர்த்தருளி | = | (தனது உபதேசத்தால்) ஒழித்து |
| தான் நினைத்த எல்லாம் | = | அவன் கருதிய பயனைத்தையும் |
| தரும் | = | அவனுக்குக் கொடுத்தருள்வான் |

(விரை) நக்கீர ரென்பது எதுகை நோக்கி 'நற்கீரர்' என வந்தது; 'தன்கோல்' என்பதில் தன் என்பது ஆகு பெயராம்.

தோத்திரப்பாக்கள் மூலமும், இலக்கண, இலக்கிய தருக்க, வேதாந்த போதகர், ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் எழுதிய உரையும் முற்றுப்பெற்றன.



"துய்ய தாமரைகளாலுந் துதித்திட வரியதான
செய்ய வேளடிகள் வாழ்க! சேவலும் மயிலும் வாழ்க!
வெய்ய சூர்மார்பு கீண்ட வேற்படை வாழ்க! வன்னன்
பொய்யில் சீரடியார் வாழ்க! வாழ்க விப்புவனமெல்லாம்"

— கந்தப்புராணச் சுருக்கம்

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,
47, நயினியப்ப நாயக்கன் வீதி, பார்க் டவுன் மதராஸ்

திருவாய் மலர்ந்தருளியது. இக்கலிவிருத்தங்கள் முருகப் பிரானை பக்தியினால் வழிப்படுத்தும் பிராத்தனைகளும், அவனருளால் மனக்கிலேசங்களால் நீங்கக்கூடும் யோகத்தை உணர்த்தும் பாக்களும், முருகனுடன் ஐக்கியபாகும் ஆத்மானுபவ ஞானபோதமாகிய செய்யுள்களும், படிப் படியாய் மக்கள் பரநிலையடையும் மார்க்கங்களும் உள்ள இந்நூலைப் பாமரரும் உணர்த்துய்யும் பொருட்டு வேதாந்த, தர்க்க, இலக்கண, இலக்கிய யோக வல்லுனராகிய ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியார் அவர்களால் பதவுரை, விசேடவுரை, விளக்கவுரைகள் செய்யப்பட்டு, அருணகிரிநாதர் சரித்திர விளக்கத்துடனும், நிவேதனப் பொருள்களின் விபரமும், ஜெபிக்கும் உரு எண்களும் சேர்த்து மக்கள் அனுபூதி யடைவான் வேண்டி 250 பக்கங்களுக்கு அதிக மான இப்புத்தகத்திற்கு சொற்ப விலையாகிய திக்காகிதம் விலை அணா. 8-ம் உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது. விலை அணா. 12

---

ஸ்ரீ குமர குருபரஸ்வாமிகள் அருளிச்செய்த

## கந்தர்கலி வெண்பா மூலமும்

### தெளிபொருள் விளக்க உரையும்.

சென்னை ஹிந்து தியலாஜிகல் உயர்தர கலாசாலை தமிழாசிரியர்

கோ. வடிவேலு செட்டியாரவர்கள் பார்வையிட்டது.

இதில் பாராயணத்திற்குரிய மூலமும், அதனதன் சூத்திர எண்ணுடன் கூடிய பதவுரை விளக்க உரையுடன் கூடிய புதிய பதிப்பு உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அணா. 8

விநாயகர் மாலை, சுப்பிரமணியர் பரம்பர பதிகம் முருகர் அந்தாதி விலை அணா. 3

# ஒவ்வொரு லைப்ரரிகளுக்கும் வாசக சாலைக்கும் வேண்டிய சற்குரு பதிப்பு புத்தகங்கள்

| | | |
|---|---|---|
| விவேகானந்த சுவாமிகள் நூல்கள் இராஜயோகமும், பதஞ்சலியோக சூத்ர வியாக்யானமும் | 2 | 4 |
| வேதாந்த ரகசியம் | 2 | 0 |
| கிழக்கு மேற்கு | 0 | 8 |
| தற்கால இந்தியா | 0 | 10 |
| கடிதங்கள் 1-2 பாகம் | 1 | 0 |
| ஞான ரத்னாவளி 1,2,3, பாகம் | 4 | 10 |
| எதிரொலிகள் | 0 | 8 |
| வேதாந்த தத்துவம் | 0 | 8 |
| எனது குருநாதர் | 0 | 8 |
| ஞானோதயம் | 1 | 0 |
| 100½ உபதேச மொழிகள் | 2 | 0 |
| அருள் மொழிகள் | 1 | 8 |
| அத்வைத சம்பாஷணை | 0 | 8 |
| சிகாகோ பிரசங்கம் | 0 | 6 |
| இராமாயண இரகசியம் பாரத ரகசியம் | 0 | 8 |
| பந்தமும் மோக்ஷமும் | 0 | 6 |
| வேதாந்த நிலைமை | 0 | 2 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண பிரம்மானந்த சம்பாஷணைகள் | 3 | 0 |
| ஸ்ரீ ராமதீர்த்த பரஹம்ஸ விஜயம் 1-2 பாகம் | 5 | 0 |
| நீதிவாக்ய மஞ்சரி | 0 | 4 |
| லலிதா ஸகஸ்ர நாமாவளி ஸ்தோதிரம், லலிதா திரிஸ்தி, அஷ்டோத்திரம் நாமாவளி 15 தேவி ஸ்தோத்திரம், தேவி சக்ரம், பஞ்சாக்ஷர சக்ரம் | 0 | 8 |
| பதஞ்சலியோக சூத்ர வியாக்யானம் (தனி) | 1 | 4 |
| கர்மயோகம்(விரிவானது) | 1 | 0 |
| ஞானயோக ரஹஸ்யம் | 2 | 4 |
| நளவெண்பா தெளிபொருள் விளக்க அகல உரையுடன் | 2 | 0 |
| நீதிநெறி விளக்கம் மூலமும் பதவுரை கருத்துரை. விசேஷ விரிவுரை ஒவ்வொரு செய்யுள்கட்கும் புதிய விஷய தலைப்பும், உதாரண திருக்குறள் பரிமேலழகர் உரையுடன் (ஆங்கில மொழி பெயர்ப்பு) | 1 | 8 |
| அகஸ்தியர் நயனவிதி 500, மூலமும் உரை; நாகமுனிவர் 200ம் திருத்தமான 2-ம் பதிப்பு | 1 | 4 |
| அகஸ்தியர் ரணவைத்தியம் 136 முறைகள் | 0 | 12 |
| சச்சிதானந்த சிவம் | 1 | 2 |
| மோக்ஷசாதன ரகசியம் | 4 | 0 |
| முருகன் பாராயண நூல்கள் திருமுருகாற்றுப்படை மூலமும், பரிமேலழகர் உரையுடன் | 0 | 12 |
| கந்தரந்தாதி மூலமும், வில்லிபுத்தூர் ஆழ்வார் உரையுடன் நூதன முறை | 0 | 12 |